"நான் என் உணவை எப்பொழுதும்
டால்டாவில்
சமைத்திருக்க விரும்புகிறேன்
அது என் தினசரி செலவாகிற
சக்தியை, திரும்பப்பெற உதவுகிறது"




சமச்சீர் உணவில் உங்களுக்குத் தேவையான கொழுப்பைக் கொடுக்கிறது

HVM. 130-172 TM



# "எனது ஹாஸ்டலில் ஞாயிற்றுக்கிழமையானது பாலுட்ரின் கிழமை........

ஒரு நாளைக்கு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை வீதம் 8 நாட்கள் உட்கொண்டால் மலேரியா குணமாகிவிடும். வாரம் ஒரு மாத்திரை சாப்பிட்டால் மலேரியா புதியதாக தொத்திக் கொள்ளாமல் தடுக்கலாம். இது உண்மை என்பது எங்களுக்கெல்லாம் தெரியும். ஆனால் தேகசுகம் நன்றாயிருக்கும் போது வாராவாரம் மாத்திரை சாப்பிடுவதை மறந்துவிடுவதும் இயல்பே. ஆகவே என் ஹாஸ்டலில் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் காலையில் எல்லோருமாகச் சேர்ந்து பாலுட்ரின் சாப்பிடுகிறோம்."

ஒரு நாளைக்கு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை விகிதம் (ஆகாரத்திற்குப் பிறகு தண்ணீருடன்) 8 நாட்கள் உட்கொண்டால் சாதாரணமாக மலேரியா பாதிப்பு அகலும். வாரம் ஒரு மாத்திரை விகிதம் உட்கொள்ளுவதனுல் புதியதாக மலேரியா தொத்துவதினின்றும் தடுக்கச் செய்யும். பின்விட்டு தேகிமம் விரும்பத்தகாத கோளாறுகள் ஏதும் இல்லாதது 'பாலுட்ரின்'. பெரியவர்கள், வயோதிகர்கள், கர்ப்பிணி ஸ்திரீகள் யாவரும் முழு நம்பிக்கையுடன் உட்கொள்ளலாம். ஒரு மாத்திரை விலை ஒரு அணா. 'பாலுட்ரின்' 8 அணாவுக்கு 8 மாத்திரைகள் அடங்கிய தாள்களில் கிடைக்கும்.

# 'பாலுட்ரின்'

மலேரியாவுக்கு அற்புதமான ஔஷதம்.




குணத்தின் ICI சின்னம்

இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ்
(இந்தியா) லிமிடெட்,
கல்கத்தா_பம்பாய் சென்னை கொச்சி_
புதுடில்லி கான்பூர்.

ICI-4 T

ஓர் புதிய பத்திரிகை

வைஜயந்திமாலாவின் தகப்பனார் ஸ்ரீ M. D. ராமன் அவர்கள் நடத்தும்

# நாட்டியமாலா

(தமிழ் மாதப் பத்திரிகை)

**தனிப் பிரதி அணா 8 : ஒரு வருட சந்தா ரூ. 6**

கௌரவ ஆசிரியர்: கே. என். தண்டாயுதபாணி

இதுவரை பத்திரிகைகளிலே கண்டிராத புதிய விஷயங்களையும், பிரபல எழுத்தாளர்களின் கவிதைகளையும், கட்டுரைகளையும், நாட்டியம், சங்கீதம், நாடகம், ரேடியோ, சினிமா முதலிய பல அம்சங்களையும், ஆர்ட் காகிதத்தில் அச்சிட்ட மூவர்ண ஓவியத்தையும் கொண்டு அதி அற்புத முறையில் பிரதி ஆங்கில மாதம் முதல் வாரம் வெளி வரும்

**முதல் பிரதி மார்ச்சு 1௳ யன்று வெளி வருகிறது**

எல்லா ஊர்களிலும் விற்பனை செய்யக்கூடிய ஏஜண்டுகள் தேவை
பிரதி ஒன்றுக்கு ரூபாய் ஒன்று வீதம் டெபாஸிட் கட்டத் தகுந்த ஏஜண்டுகள் மட்டும் உடனே விண்ணப்பித்துக் கொள்ளவும்

விவரங்களுக்கு: நாட்டியமாலா

எல்டாம்ஸ் ரோடு : தேனாம்பேட்டை : மதராஸ்-18

---

**பனிகால இருமல்களை ஸிரோலின் 'ரோச்'சினால் நிறுத்துங்கள்**

அபாயமின்றி
உட்கொள்ளக்கூடிய
குடும்ப ஔஷதம்!



# இந்த 3 பாயிண்டு சேமிப்பு திட்டத்தை உங்கள் பாதுகாப்பு சாஸனமாகச் செய்து கொள்ளுங்கள்

**1** உங்கள் சொந்த நலனுக்காகவே சொல்லுகிறோம். உங்களது தற்போதைய தேவைகளுக்காக எவ்வளவு செலவழிக்க நேரிட்டாலும் எதிர்பாராத விதமாக ஏற்படும் செலவுகளுக்கென்று ஏதாவது கொஞ்சம் ஒதுக்கி வைக்கவே நீங்கள் விரும்புவீர்கள். தபால் ஆபீஸ் ஸேவிங்ஸ் பாங்கி சிக்கனத்தை ஆதரிக்கிறது. உங்களது சிறு சேமிப்புகளைப் போட்டு வைக்க தகுதி வாய்ந்த வசதிகளைச் செய்து கொடுக்கிறது. ரூ. 200-க்கு மேல் பாங்கியில் இருந்தால் வருமான வரியின்றி வருஷத்திற்கு 2% விதம் வட்டியும் தருகிறது. உங்கள் டிபாஸிட் பணத்திலிருந்து அவசரத்துக்கு உடனுக்குடன் பணம் பெறுவதற்கு முடியும். அத்துடன் பாதுகாப்புக்கு உத்தரவாதம்.

**2** உங்கள் சொந்த நலனுக்காகவே சொல்லுகிறோம். வருங்காலத்திற்காகப் போதுமான ஏற்பாடுகளை நீங்கள் செய்து கொள்ள விரும்புவீர்கள். நாஷனல் ஸேவிங்ஸ் சர்டிபிகேட்டுகளில் முதலீடு செய்து வையுங்கள். இன்று பிரசித்தமாயுள்ள சேமிப்பு முறை அது தான். ஏனெனில் இவை சர்க்கார் உத்தரவாதம் பெற்றவை. உயர்ந்த விகித வட்டியை தருபவை. மேலும் அவற்றின் மூலம் கிடைக்கும் வட்டிப் பணத்திற்கு வருமான வரி கிடையாது என்பது மட்டுமின்றி, மொத்தமாகக் கிடைக்கும் வருமானமும் வரி விலக்கப் பெற்றது. இன்று ரூ. 100 போட்டு வைத்தால் 12 வருஷத்தில் அது ரூ. 150 ஆகும். 5, 7, வருஷ சர்டிபிகேட்டுகளும் முறையே 3%, 3½% க்குச் சற்றுக் கூடுதலாகவும் கிடைக்கும். இந்த சர்டிபிகேட்டுகளை காலாவதியாவதற்கு முன் தேவை ஏற்பட்டால் மாற்றிப் பணமாக்கிக் கொள்ளலாம். அவை வாங்குவதற்குச் சுலபமானவை; வைத்திருப்பதற்குப் பத்திரமானவை.

**3** உங்கள் சொந்த நலனுக்காகவே சொல்லுகிறோம். பொதுவாக நாட்டின் சுபிட்சத்தை அதிகரிப்பதற்காக நீங்கள் தேசிய முயற்சிக்கு உதவி செய்ய விரும்புவீர்கள். உங்களுடைய பெரிய சேமிப்புகளை தேசிய முன்னேற்ற திட்டங்களைப் பூர்த்தி செய்வதற்காகப் போட்டு வையுங்கள். பொது நலத் திட்டக்காரர்களுக்கு, அவ்வப்போது கோரப்படும் சர்க்கார் கடன் பத்திரங்களில் கணிசமான பணம் போடுவதைவிடச் சிறந்த முதலீடு வேறு எதுவும் கிடையாது.

**சாத்தியமானதை எல்லாம்**
**சேமியுங்கள்**
**புத்திசாலித்தனமாக**
**முதலீடு செய்யுங்கள்**

**நேஷனல் ஸேவிங்ஸ் கமிஷனர் அறிக்கை**
**இந்திய சர்க்கார், நிதி மந்திரி காரியாலயம்**

A. C. 225

# பொருள்  அடக்கம்

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மலர் 10 இதழ் 25 } 1951 ஜனவரி 21 { விக்ருதி ௵ தை மீ 8உ

# கட்டுக் கதை!




"கொரியா யுத்தத்தைப் பற்றி மெக் ஆர்தர் தலைமைக் கா[redacted]லயம் கொடுக்கும் தகவல்கள் உண்மைக் கலப்பு அற்ற கட்டுக் கதைகளாக இருக்கின்றன." இவ்வாறு, கொ[redacted]ந்துள்ள பிரபல பிரிட்டிஷ் பத்திரிகை 'திருபர்கள்' கூறுகின்றனர்.




# கைத்தறியும் மத்தளமும்

தேசிய வாதிகள் பிரசங்க மேடைகளில் இங்கிலீஷ்காரர்களின் மண்டையை உருட்டிக் கொண்டிருந்த காலம் ஞாபகம் இருக்கிறதா? இந்தியாவுக்குப் பிரிட்டிஷார் இழைத்த அநீதிகளைப் பற்றிச் சரமாரியாகப் பொழிந்து கொண்டிருந்த காலம் நினைவில் இருக்கிறதா? அப்போதெல்லாம் ஆங்கிலேயர்மீது ஒரு பெரிய குற்றத்தை நாம் சுமத்திக் கொண்டிருந்தோம். "பாவிகள் வந்தார்கள்! கைத்தறிகளை ஒழித்தார்கள்!" என்ற பல்லவியைப் பாடிக் கொண்டிருந்தோம். இந்தியாவின் கைநெசவுத் தொழிலை கிழக்கிந்தியக் கம்பெனியார் வந்ததிலிருந்து எப்படி நசிக்கச் செய்தார்கள் என்பதைப் பற்றிக் காங்கிரஸ்வாதிகள், தேசியவாதிகள், தீவிரவாதிகள், மிதவாதிகள் எல்லாருமே ஏகமனதாகத் தாக்கி வந்தார்கள்.

காந்தி மகாத்மா தேசத்தலைவரான பிறகு வெறும் வாய்த் தாக்குதலோடு நிற்கவில்லை. கைராட்டைக்கும் கைத்தறிக்கும் புத்துயிர் கொடுக்கப் பெரு முயற்சி நடைபெற்றது. அதில் ஓரளவு வெற்றியும் அடைந்தோம்.

ஆகவே, சுதந்திரம் பெற்ற இந்தியாவில்,—குடியரசு இந்தியாவில்,—காங்கிரஸ் தலைவர்கள் ஆட்சி புரியும் இந்தியாவில்,—கைத்தறித் தொழிலுக்கு ஆபத்தே வராது என்ற நம்பிக்கை எல்லாருக்கும் இருந்தது. கைத்தறித் தொழில் செழித்து வளர எல்லாவித உதவிகளும் சலுகைகளும் கிடைக்கும் என்று எதிர்பார்த்ததும் இயல்பேயாகும்.

ஆனால், நடந்தது என்ன தெரியுமா? எதிர்பார்த்ததற்கு நேர்மாறான நிலைமைதான் ஏற்பட்டது.

இந்தியா சுதந்திரம் பெற்ற நாளிலிருந்து கைத்தறித் தொழில் நாளுக்கு நாள் கஷ்டத்துக்குமேல் கஷ்டமாக அடைந்து க்ஷீணித்து வந்திருக்கிறது.

சென்னை மாகாணத்தில் மாத்திரம் முப்பது லட்சம் கைத்தறி நெசவாளர்களின் குடும்பங்கள் சென்ற பல மாதங்களாகப் பஞ்சத்தினாலும் பட்டினியினாலும் பரிதவிக்கும்படி நேர்ந்திருக்கிறது.

நாடு முழுவதையும் அலங்கோலப்படுத்தி வரும் உணவுப் பஞ்சம் ஒருபுறமிருக்க, கைத்தறி நெசவாளர்கள் உணவுப் பஞ்சத்துடன் தொழில் பஞ்சத்துக்கும் இலக்காகும்படி நேர்ந்திருக்கிறது. கைத்தறி நெசவுக்குப் போதிய நூல் கிடைப்பதில்லை.

கறுப்பு மார்க்கெட்டில் நூல் வாங்கி நெய்தால் துணியின் விலை அசாத்திய கிராக்கியாகி விடுகிறது. நெய்த துணி விற்பனையாகாமல் குவிந்து விடுகிறது. எனவே, கைத்தறிகள் சோம்பிக் கிடக்கின்றன. கைத்தறி நெசவில் பிழைத்த குடும்பங்கள் வேலையின்றியும், கூலியின்றியும், உணவின்றியும் பரிதவிக்கின்றன.

இந்த நிலைமைக்குக் காரணம் என்ன? சுதந்திர இந்தியாவில் இந்த அலங்கோலமான நிலைமை ஏற்படுவானேன்?

பல காரணங்களைக் கற்பித்துச் சொல்லலாம். உலக மகாயுத்தம், உலகப் பொருளாதார நெருக்கடி, பாகிஸ்தான் பிரிவினை, ஸ்டர்லிங் கடன் பாக்கி, பருத்தி விளைவுக் குறைவு,—இப்படிப் பல சந்தர்ப்பங்களின் தலையில் பழியைப் போடலாம்.

ஆயினும், இவ்வளவு காரணங்களையும் நிவர்த்தி செய்து கைத்தறித் தொழிலைப் பாதுகாப்பது சுதந்திர இந்திய சர்க்காரின் கடமையாகும். அப்படிச் செய்யாவிடில், ஒரு முக்கியமான கடமையில் தவறியதாகும். கடமையில் தவறி

யதோடு, இந்திய சர்க்காரின் நிர்வாகத் தவறுகளும் சேர்ந்து கைத்தறித் தொழிலுக்குக் கேடு சூழ்வது என்றால், அதை யாரால்தான் சகிக்க முடியும்?

இந்திய சர்க்காரின் புதிய தொழில் மந்திரி கனம் ஹரிகிருஷ்ண மஹ்தாப் அவர்களினாலேயே சகிக்க முடியவில்லை!

நல்ல மனுஷ்யர்! நாணயமான மனுஷ்யர்! ஆதலின், சர்க்கார் நிர்வாகத் தவறுகளும் சேர்ந்து விட்டன என்பதை ஒப்புக் கொண்டார்!

அந்த வரையில் விசேஷந்தான்! ஒப்புக்கொண்ட படியால், தவறுகளுக்குப் பரிகாரம் ஏற்படலாம் என்ற நம்பிக்கையும் உண்டாகிறது.

* * * *

சென்னை மாகாணத்தில் உற்பத்தியாகும் கைத்தறித் துணிகளை பர்மா, மலேயா, ஆப்பிரிக்கா முதலிய வெளிநாடுகளுக்கு யாதொரு தடையுமின்றி ஏற்றுமதி செய்ய நெசவாளர்களுக்கு ஏற்கெனவே உரிமை இருந்து வந்தது. ஆனால் அந்த உரிமையை இந்திய சர்க்கார் 1948-ம் வருஷத்தில் ரத்து செய்து விட்டார்கள். அதற்குப் பதிலாகப் 'பர்மிட்' முறையொன்றை அமுலுக்குக் கொண்டு வந்தார்கள். அந்த முறையின் விளைவாகக் கைத்தறி ஜவுளிகள் தேங்க ஆரம்பித்தன. நெய்த துணிகளை வாங்குவோர் இருந்தும் விற்க முடியவில்லையே என்று நெசவுத் தொழிலாளர்கள் தவித்தார்கள்.

இது அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட முதல் அடி!

இந்த லட்சணத்தில் ஒரு வருஷத்துக்கு முன் இந்திய சர்க்கார் வெளி நாடுகளுக்கு நூல் ஏற்றுமதியை அனுமதித்துவிட்டார்கள்.

அவ்வளவுதான்! மேற்படி சந்தர்ப்பத்தை மில் முதலாளிகள் பூரணமாக உபயோகப்படுத்திக் கொள்ளாமல் விடுவார்களா? சுதந்திரப் போராட்டம் நடந்த காலத்தில் அன்னியத் துணி பகிஷ்கார இயக்கத்தைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு கொள்ளை லாபம் சம்பாதித்த மில் முதலாளிகள் இந்திய சர்க்காரின் உத்தரவையும் பயன்படுத்திக் கொண்டார்கள். மில்களில் உற்பத்தியாகும் பல ரக நூல் பேல்களையும் அதிக விலைக்கு வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து கொள்ளை லாபம் அடித்தார்கள். அவர்களுடைய செய்கை நம் நாட்டில் கொடுமையான நூல் பஞ்சத்தைச் சிருஷ்டித்து விட்டது.

நூல் ஏற்றுமதி உத்தரவு கைத் தறி நெசவாளர்களுக்குக் கொடுக்கப்பட்ட இரண்டாவது அடி!

நெசவாளர்கள் நெய்த துணிகள் விற்பனையாகாமல் தேங்கிக் கிடக்கும்படி முதல் உத்தரவு செய்தது. இரண்டாவது உத்தரவு நெசவாளர்களுக்கு நூலே கிடைக்காமல் செய்து விட்டது! இவ்வாறாகக் கைத் தறி நெசவாளர்களின் கதி இருபுறமும் இடிபடும் மத்தளத்தின் கதையாக முடிந்தது!

இந்திய சர்க்கார் உத்தரவுகளின் விளைவாக நெசவாளர்களின் குடும்பங்களில் பல பட்டினி கிடக்கும்படியாயிற்று. சேலத்திலே பல குடும்பங்கள் நெசவுத் தொழிலை விட்டுவிட்டு விறகு வெட்டி ஜீவனம் செய்ய நேர்ந்ததாம். மற்றும் பலர் பச்சை இலைகளையும் புளியங் கொட்டைகளையும் தின்று உயிர் வாழ நேர்ந்ததாகச் சென்ற மாதம் நமது வட்டமேஜையில் பிரசுரமான ஒரு கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது.

* * * *

எனினும் ஏழை நெசவுத் தொழிலாளர்களின் கூக்குரல் இப்போதாவது சர்க்கார் செவிகளில் விழுந்ததைக் குறித்துச் சந்தோஷம் அடைகிறோம்.

ஸ்ரீ ஹரிகிருஷ்ண மஹ்தாப் சென்ற வாரம் சென்னைக்கு விஜயம் செய்தார். "நூல் ஏற்றுமதியை அனுமதித்தது தவறு. சர்க்கார் செய்த இந்தத் தவறை ஒத்துக் கொண்டு பரிகாரம் தேடவே தான் இங்கு வந்திருக்கிறேன். இப்போது ஏற்பட்டுள்ள நிலைமைக்குச் சர்க்கார்தான் பொறுப்பாளி" என்று அப்போது பட்டவர்த்தனமாக ஒத்துக்கொண்டார் ஸ்ரீ மஹ்தாப்.

இந்திய சர்க்கார் கைத் தொழில் மந்திரி சர்க்காரின் தவறை ஒத்துக் கொண்டதுடன் திருப்தி அடையவில்லை.

கைத்தறி நெசவாளர்களின் கஷ்டங்கள் தீருவதற்கான முறைகளைச் சர்க்கார் கைக் கொள்ளத் தீர்மானித்திருப்பதாகவும் உறுதி கூறினார்.

சென்னை மாகாணத்துக்கு இம் மாதம் 17,451 பேல்களும், பிப்ரவரியில் 18,801 பேல்களும், மார்ச் மாதம் 19,037 பேல்களும் நூல் விநியோகிக்கப் படும் என்று ஸ்ரீ மஹ்தாப் அறிவித்துள்ளார்.

ஆனால் நெசவாளர்களின் சார்பில் அவரிடம் சமர்ப்பிக்கப்பட்ட மகஜரில் மாதம் முப்பதாயிரம் பேல் நூல் சப்ளை செய்தாலன்றிச் சென்னைக் கைத்தறி நெசவாளர்களின் நிலைமையில் அதிக அபிவிருத்தி ஏற்படுவதற்கு இடமில்லை என்று அறிவிக்கப் பட்டிருக்கிறது. முப்பதாயிரம் பேல்கள் கொடுத்தால்தான் சென்னை மாகாணத்திலுள்ள கைத்தறிகளில் மாதத்தில் இருபது நாளாவது வேலை நடைபெறும் என்றும் அந்த மகஜரில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

கைத்தொழில் மந்திரி ஸ்ரீ மஹ்தாப் நமது மாகாணத்தில் ஒரு வாரம் வரையில் யாத்திரை செய்தார். பல நகரங்களுக்கும் நேரில் சென்று கைத்தறி நெசவாளர்களின் கஷ்ட நஷ்டங்களைக் காதால் கேட்டதுடன் கண்ணாலும் பார்த்தார்.

" இனி கவலைப் படாதீர்கள். என்னவானாலும் கைத்தறி நெசவுத் தொழிலைப் பூரணமாக ஆதரிக்க சர்க்கார் உறுதி கொண்டிருக்கிறார்கள். உங்களுடைய துன்பத்துக்குக் காரணமான நூல் ஏற்றுமதியை இந்த வருஷ ஆரம்பத்திலிருந்து தடுத்து விட்டோம். எனவே நூல் பஞ்சம் கூடிய சீக்கிரம் தீர்ந்துவிடும். எதிர்காலத்தில் நூல் பஞ்சம் என்ற பேச்சுக்கே இந்த நாட்டில் இடம் இல்லாமற் செய்து விடுகிறோம். கைத்தறி ஜவுளிகளை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யவும் அனுமதிக்க வேண்டும் என்பதை உணர்ந்திருக்கிறேன் " என்று ஸ்ரீ மஹ்தாப் கூறிச் சென்றிருக்கிறார்.

எனவே, இந்திய சர்க்கார் தாங்கள் செய்த பெரும் தவறுக்குப் பிராயச்சித்தமாக சென்னை மாகாணத்துக்கு ஒதுக்கப்படும் நூல் பேல்களின் தொகையை அதிகப் படுத்துவார்கள் என்று எதிர்பார்க்கிறோம். இந்த மாகாணத்தில் விவசாயத்துக்கு அடுத்தபடியாக லட்சக்கணக்கானவர்கள் ஈடுபட்டுள்ள கைத்தறி நெசவுத் தொழிலுக்கு இனி எக்காலத்திலும் இத்தகைய இன்னல் ஏற்படாதிருக்கவும், மேற்படி தொழில் வளர்ச்சி யடையவும் தகுந்த முறைகளைக் கைக் கொள்வார்கள் என்று நம்புகிறோம்.

## அட்டைப்பட விளக்கம்

பண்ணொன்று வேய்ங்குழலில் ஊதி வந்திட்டால்—அதைப்
பற்றி மறக்குதில்லை பஞ்சை யுள்ளமே

—பாரதியார்

கண்ணன் மீது மையல் கொண்டது எவ்வளவு பெரிய தவறு என்ற முடிவுக்கு வந்து விட்டாள் அந்தப் பெண்.

" இன்றைக்கு இன்ன இடத்தில் சந்திக்கிறேன் என்பது, நாளைக்கு இன்னொரு இடத்தில் சந்திக்கிறேன் என்பது கடைசியில் இன்றும் சந்திப்பதில்லை, நாளையும் சந்திப்பதில்லை ; எந்த இடத்திலும் சந்திப்பதில்லை! இப்படிப்பட்ட கண்ணனோடு என்ன உறவு வேண்டிக் கிடக்கிறது. இந்தக் கண்ணனை மறந்து தொலைப்பதுதான் நல்லது. 'உள்ளமே! நீ இனி இந்தக் கண்ணனைப் பற்றி நினையாதே!' " என்று தன் உள்ளத்துக்கும் ஆக்ஞை யிட்டு வைத்தாள்.

மனசு அவ்வளவு சுலபமாகச் சொன்னபடி கேட்டு விடுகிறதா! அதனால் மனசை வேறு விதச் சிந்தனைகளில் செலுத்த நினைத்து ஆற்றங்கரைக்குப் புறப்பட்டாள். கையில் குடத்துடன், தண்ணீர் மொண்டு வரும் எண்ணத்துடன் புறப்பட்டாள்.

வழியில் ஒரு தாமரைக் குளமிருந்தது. அதிலிருந்து இரண்டு தாமரை மொட்டுக்களைப் பறித்துக் குடத்துக்குள் வைத்துக் கொண்டு மேலே நடந்து கொண்டிருந்தாள். ஏதேதோ நினைத்துக் கொண்டே நடந்தாள்! அப்போது எங்கிருந்தோ இனிய பண் ஒன்று காற்றில் மிதந்து வந்தது. 'குழலோசை யன்றோ கேட்கிறது! எவ்வளவு இனிமையாக இருக்கிறது! கண்ணன் அல்லவோ குழல் எடுத்து ஊதுகிறான்!' என்று கண்டு கொண்டாள். உடனே அவள் தீர்மானங்கள் முடிவுகள் யாவும் இருந்த இடம் தெரியாமல் மறைந்து விட்டன. கண்ணனின் நினைவே, உள்ளத்திலும் உடலிலும் வியாபித்து நின்றது!

உள்ளத்தில் பொங்கிவரும் ஆனந்தத்தைப் பெரு முயற்சி செய்து அடக்கிக் கொள்ளப் பார்க்கிறாள். ஒரு கணம்தான் அப்படி அடக்கி வைத்துக் கொண்டு நிற்க முடிகிறது! அடுத்த கணம், குடத்தை மறந்து, மலரை மறந்து, குழலோசையைத் தொடர்ந்து ஓடப்போகிறாள்!

அப்படி ஓடுவதற்கு முன் பொங்கி வரும் மகிழ்ச்சியை அடக்கிக் கொள்ள முயலும் அற்புதக் காட்சியை, அந்த ஒரு கண நேர விசித்திர அனுபவத்தை இந்த இதழ் அட்டைப்படமாக நமது சித்திரக்காரர் தீட்டி யிருக்கிறார்.

பவநகர் சதாவதானம்! -ரதன்

## பவநகர் சதாவதானம்!

சென்னைக் கவர்னர் பவநகர் மஹாராஜா கிரிக்கெட் ஆடுவார்; குதிரை மேல் ஏறிப் 'போலோ' ஆட்டம் ஆடுவார்; ஹாக்கி விளையாடுவார். குறிபார்த்து அம்பு எய்வதில் கைதேர்ந்தவர் என்றெல்லாம் அறிகிறோம்.

ஆகையால் அவர் திருவையாற்றில் நடக்கப் போகும் தியாகப் பிரம்ம உற்சவத்தில் சகல...

...பக்க வாத்தியங்களையும் அவரே வாசித்துக் கொண்டு சங்கீதக் கச்சேரி செய்தால் யாரும் ஆச்சரியப் படுவதற்கில்லை!

# அக்கப் போர்

பம்பாயில் ஒரு மந்திரவாதி கண்களை மூடிக் கொண்டு சைக்கிள் சவாரி செய்தாரென்று ஒரு செய்தி கூறுகிறது.

இந்த மந்திரவாதி மாத்திரம் என்ன, எல்லா சைக்கிள்காரர்களும் கண்ணை மூடிக்கொண்டு தான் வண்டியை விடுகிறார்கள் என்கிறார் ஒரு பாதசாரி.

★

"காமன்வெல்த் பிரதமர்களுக்கு இந்திய ஸ்தானீகரான ஸ்ரீ பணிக்கர் மூலம் செஞ்சீன செய்தி தெரிவிக்குமென்று எதிர்பார்க்கப் படுகிறது." —லண்டன் செய்தி.

பணிக்கர் மூலம் செஞ்சீன அனுப்பும் செய்தி பணிவாக இருக்கும் என்றும் அந்தச் செய்தி மூலம் காமன்வெல்த் மகாநாட்டை செஞ்சீன ஏதும் பணிக்காது என்றும் நாம் நம்புவோமாக!

★

"தாய் தகப்பன் இருவருக்கும் ரத்தக் கோளாறு இருந்தபடியால் அப்பொழுதுதான் பிறந்த சிசு இறக்கும் தறுவாயில் இருந்தது. டாக்டர் உடனே சிசுவின் ரத்தம் எல்லாவற்றையும் எடுத்துவிட்டு வேறு ரத்தம்செலுத்திச் சிசுவைப் பிழைக்க வைத்தார்." —செய்தி.

இப்படிப் பிழைத்த குழந்தையின்மீது பெற்றோருக்கு ரத்தபாசம் இருக்குமா, இல்லாமல் போய்விடுமா என்பது நமது சந்தேகம்!

★

"ரயில் கார்டுகள் உண்ணாவிரதம்."

—ஒரு செய்தித் தலைப்பு

இந்த ரயில் கார்டுகளின் ரேஷன் கார்டுகள் நமக்குக் கிடைக்குமா!

★

"காப்பியங்களைப் படிப்பதென்றால் எனக்கு ஒரு அலாதியான உற்சாகம் ஏனோ தெரியாது" என்கிறார் ஒரு ரஸிகர்.

"காப்பியங்கள் என்னும் பதத்தில் இருக்கும் 'காப்பி'தான் உம்முடைய உற்சாகத்துக்குக் காரணம்" என்கிறார் ஒரு காப்பிப் பொடியாழ்வார்!

★

"அச்சிஸனை நீக்கமுடியாது என்று ட்ரூமன் சொன்னார்." —செய்தி.

அச்சிஸனுடைய சீஸன் முடிந்தவுடன் அவரே போய் விடுகிறார்!

★

"கண்ணாடி, பீங்கான், ஊசி, ஆணி, அக்கினித்திராவகம் ஆகியவற்றை ஒரு ஹடயோகி மென்று தின்று விழுங்குகிறாராம். இவர் அமெரிக்காவுக்கும், சோவியத் ரஷ்யாவுக்கும் விஜயம் செய்யப் போகிறாராம்." —டெல்லிச் செய்தி.

அமெரிக்காவிலும், ரஷ்யாவிலும் செய்து குவிக்கப்பட்டுள்ள அணுகுண்டுகளை இந்த ஹடயோகி மென்று தின்று விழுங்கி உலக சமாதானத்துக்குத் தன்னாலான கைங்கரியத்தைச் செய்வாரென்று எதிர்பார்க்கிறோம்.

"லண்டனில் நடக்கும் காமன்வெல்த் பிரதமர்கள் மகாநாட்டுக்கு, கடைசியாக நான்கு நாள் தாமதத்திற்குப் பிறகு ஸ்ரீ லியாகத் அலிகான் புறப்பட்டு விட்டார். அவருடன் ஸ்ரீமதி லியாகத் அலியும் சென்றிருக்கிறார்."

—ஒரு செய்தி.

ஸ்ரீ லியாகத் அலிகான் லண்டனுக்குப் புறப்படத் தாமதம் ஏற்பட்டதற்குக் காரணம் இப்பொழுதுதான் நமக்கு விளங்குகிறது!

★

"சிறு குழந்தைகளுக்கும் யுத்த நிலவரத்தில் அக்கறை உண்டாக்கும்பொருட்டு அமெரிக்காவில் ஏ என்னும் எழுத்துக்கு அணு என்றும் பி என்னும் எழுத்துக்கு 'பாம்' அதாவது குண்டு என்றும் இந்தமாதிரியாக பாடம் சொல்லிக் கொடுக்கிறார்களாம்."

—ஒரு செய்தி.

ஸி என்னும் எழுத்துக்கு 'ஸெமெடெரி' அதாவது கல்லறை என்று சொல்லிக் கொடுத்திருப்பார்கள் என்று நாம் ஊகிக்கலாமா!

★

"ரேஷன் தானியங்களை எடைபோட்டு விற்பதைப்பற்றி இன்னும் சர்க்கார் முடிவான தீர்மானத்திற்கு வரவில்லை."

—சென்னைச் செய்தி.

இந்த எடைபோட்டு விற்கும் விஷயம் அவசரப்பட்டுச் செய்யக் கூடியதில்லை. சீர்தூக்கிப் பார்த்து முடிவுகட்ட வேண்டியதல்லவா!

★

"இந்திய கோணிப் பைகளுக்குச் சீனாவில் நல்ல கிராக்கி ஏற்பட்டிருக்கிறது. எவ்வளவு கோணியானாலும் சீனா வாங்கத் தயார்."

—பீகிங் செய்தி

கொரியாவில் வந்து இறங்கியுள்ள அமெரிக்கர்களை மூட்டை கட்டி அனுப்பத்தான் இவ்வளவு கோணி சீனர்களுக்கு வேண்டி இருக்கிறதோ!

★

"பஞ்சாப் சர்வகலாசாலை பட்டமளிப்பு விழாவின்போது ஜனாதிபதி பேசி முடித்தவுடன், ஒருவர் மேடையின்மீது ஏறி காந்தியத்தை யாருமே பின்பற்றுவது இல்லை என்று கூறினாராம்." —அம்பாலா செய்தி

பட்டமளிப்பு விழாவின்போது விஷயத்தை இவ்வளவு அப்பட்டமாகச் சொன்னவர் யாரோ!

★

"சீனாவுக்காக சணல் ஆர்ஜிதம்."

—ஒரு செய்தித் தலைப்பு

இந்தச் செய்தி ஊர்ஜிதம் ஆனதுதானா!

★

"எல்லா நம்பர் நூல்களுக்கும் ஏற்றுமதித் தடையை விதித்திருப்பதாக இந்திய சர்க்கார் அறிவித்திருக்கின்றனர்." —செய்தி

ஒன்றாம் நம்பர் காரியம் தான் இது!

★

"சமாதான லட்சியத்தை நாம் மறக்கக் கூடாது." —நேரு

இன்று உலகத்தில் மிகவும் அலட்சியம் செய்யப்படும் லட்சியம் சமாதான லட்சியம் தான்!

# பொன்னியின்

அத்தியாயம் 27

## ஆஸ்தானப் புலவர்கள்

**ப**ராக்! பராக்! இதோ வருகிறார்கள் புலவர் பெருமக்கள்! கவிஞர் சிகாமணிகள்! தமிழ்ப் பெருங்கடலின் கரை கண்டவர்கள்! அகத்தியனாரின் வழி வந்தவர்கள்! தொல்காப்பியம் முதலிய சங்க நூல்களைக் கரைத்துக் குடித்தவர்கள்! சிலப்பதிகாரம் முதலிய ஐம்பெருங் காவியங்களைத் தலைகீழாகப் படித்தவர்கள்! தெய்வத் தமிழ் மறையான திருக்குறளையும் ஒரு கை பார்த்தவர்கள்! இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் அறிந்தவர்கள்! இலக்கணம் கூறியதற்கு இலக்கியம் தெரிந்தவர்கள்! தாங்களே சுயமாகவும் கவி பாட வல்லவர்கள். அவர்கள் ஒவ்வொருவரும் எழுதிய கவிகள் அடங்கிய ஏட்டுச் சுவடிகள் கோடானு கோடி கரையான்களுக்குப் பல்லாண்டு உயிர் வாழ்வதற்கு உணவாகும் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்!

புலவர் பெரு மக்கள் அவ்வளவு பேரும் கும்பலாகச் சுந்தர சோழ சக்கரவர்த்தியின் சந்நிதானத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

"வாழ்க! வாழ்க! ஏழுலகமும் ஒரு குடையின் கீழ் ஆளும் சுந்தர சோழ மகா சக்கரவர்த்தி வாழ்க! பாண்டியனைச் சுரம் இறக்கின பெருமான் வாழ்க! புலவர்களைப் புரக்கும் பெருமான் வாழ்க! கவிஞர்களின் கதியான கருணை வள்ளல் வாழ்க! பண்டித வத்ஸலராகிய பராந்தக சக்கரவர்த்தியின் திருப் பேரர் நீடூழி வாழ்க!" என்று வாழ்த்தினார்கள்.

இந்தக் கோஷங்களையும் கூச்சல்களையும் சுந்தர சோழர் அவ்வளவாக விரும்பவில்லை. எனினும் அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல், தமது நோயையும் மறந்து, வந்தவர்களை வரவேற்பதற்காக எழுந்திருக்க முயன்றார்.

உடனே, சின்னப் பழுவேட்டரையர் முன் வந்து, "பிரபு! புலவர்கள் தங்களைத் தரிசித்து மரியாதை செலுத்தி விட்டுப் போக வந்திருக்கிறார்களேயன்றித் தங்களுக்குச் சிரமம் கொடுக்க வரவில்லை. ஆகையால்



# பொன்னியின் செல்வன்

தயவு செய்து தங்களைச் சிரமப்படுத்திக் கொள்ளக் கூடாது!" என்றார்.

"ஆம், ஆம்! அரசர்க்கரசே! சக்கரவர்த்திப்பெருமானே! தங்களுக்குச் சிறிதும் சிரமம் கொடுக்க நாங்கள் வந்தோமில்லை!" என்றார் புலவர்களின் தலைவராகிய நல்லன் சாத்தனார்.

"உங்களை யெல்லாம் நெடுநாளைக்குப் பிறகு பார்ப்பதில் எனக்கு மிக்க மகிழ்ச்சி. அனைவரும் அமர வேண்டும். சில பாடல்கள் சொல்லி விட்டுப் போகவேண்டும்!" என்றார் தமிழன்பரான சக்கரவர்த்தி.

தரையில் விரித்திருந்த ரத்தின ஜமக்காளத்தில் எல்லோரும் உட்கார்ந்தார்கள். அதுதான் சமயமென்று நமது வீரன் வல்லவரையனும் புலவர் கூட்டத்துடன் கலந்து உட்கார்ந்து கொண்டான். தான் சொல்ல விரும்பியதை முழுதும் சக்கரவர்த்தியிடம் சொல்லாமல் போக அவனுக்கு மனம் இல்லை. சந்தர்ப்பம் ஒருவேளை மறுபடி கிடைத்தால் சொல்லி விட்டுப் போகலாம் என்று எண்ணி உட்கார்ந்தான்.

இதைச் சின்னப் பழுவேட்டரையர் கவனித்தார். அவருடைய மீசை துடித்தது. முதலில் அவனை வெளியில் அனுப்பிவிட லாமா என்று நினைத்தார். பிறகு, அவன் அங்கே தம்முடைய கண் காணிப்பில் இருப்பதே நலம் என்று தீர்மானித்தார். எனவே, அவனைப் பார்த்தும் பார்க்காததுபோல் இருந்தார். இந்தப் புலவர்கள் சென்ற பிறகு அவனை வெளியே அழைத்துச் சென்று அவன் மகாராஜாவிடத்தில் சொன்ன செய்தி என்னவென்பதை நன்கு தெரிந்து கொள்ள விரும்பினார். "அபாயம்! அபாயம்!" என்ற அவனுடைய குரல் அவர் காதில் இன்னும் ஒலித்துக் கொண்டே இருந்தது.

* * *

"புலவர்களே! தமிழ்ப் பாடல்கள் கேட்டு அதிக காலமாயிற்று. என் செவிகள் தமிழ்ப் பாடலுக்குப் பசித்திருக்கின்றன. உங்களில் எவரேனும் புதிய பாடல் ஏதேனும் கொண்டு

கல்கி



வந்திருக்கிறீர்களா?" என்று சக்கரவர்த்தி சுந்தர சோழர் கேட்டார்.

உடனே ஒரு புலவர் சிகாமணி எழுந்து நின்று, "பிரபு! உலக புரத்தில் தங்கள் திருப் பெயரால் விளங்கும் சுந்தர சோழப் பெரும்பள்ளியிலிருந்து அடியேன் வந்தேன். சிவநேசச் செல்வராகிய தாங்கள் பௌத்த மடாலயத்துக்கு நிவந்தம் அளித்து உதவியதை இந்தத் தமிழகமெங்கும் உள்ள பௌத்தர்கள் பாராட்டிப் போற்றுகிறார்கள். தாங்கள் உடல் நோயுற்றிருப்பது அறிந்தது முதல் பிக்ஷுக்கள் மிக்க கவலை கொண்டு தங்கள் உடல் நலத்துக்காகப் பிரார்த்தனை நடத்தி வருகிறார்கள். அந்தப் பிரார்த்தனைப் பாடலை இவ்விடம் சொல்ல அருள் கூர்ந்து அனுமதி தர வேண்டும்!" என்றார்.

"அப்படியே சொல்ல வேணும்; கேட்கக் காத்துக் கொண்டிருக்கிறேன்" என்றார் சக்கரவர்த்தி.

புலவர் பின்வரும் பாடலை இசையுடன் பாடினார்.

"போதியந் திருநிழல் புனித! நிற் [பரவுதும்
மேதகு நந்திபுரி * மன்னர் சுந்தரச்
சோழர் வண்மையும் வனப்பும்
திண்மையும் உலகிற் சிறந்துவாழ் [கெனவே!"

பாடலைக் கேட்டதும் புலவர்கள் அத்தனை பேரும் "நன்று! நன்று!" என்று கூறித் தங்கள் பாராட்டுதலைத் தெரிவித்தார்கள்.

"புத்தர்கள் இவ்வளவு நன்றியுடையவர்களாயிருப்பது வியப்பு, வியப்பு!" என்றார் ஒரு வீர சைவக் கவிராயர்.

"ஆம்; அது வியப்பான காரியந்தான். உலகபுரம் புத்த மடத்துக்கு நான் செய்த சேவை மிக அற்பம். அதற்கு இவ்வளவு பாராட்டு வேண்டுமா?" என்றார் மன்னர்.

"சக்கரவர்த்தியின் வண்மைத் திறத்தை அநுபவித்தவர் யார்தான் என்றென்றைக்கும் நன்றி செலுத்திப் பாராட்டாதிருக்க முடியும்? இந்திரனும் சூரியனும் சிவபெருமானும்கூடத் தங்களுடைய வண்மையின் பயனை அநுபவித்திருக்கிறார்கள்!" என்றார் மற்றோர் புலவர் சிரோமணி.

சுந்தர சோழர் முகத்தில் புன்னகை தவழ, "அது என்ன? இந்திரனும் சூரியனுமா? சிவபெருமான் கூடவா? அவர்கள் எதற்காக என்னிடம் நன்றி செலுத்த வேண்டுமாம்?" என்று கேட்டார்.

"ஒரு பாடல் சொல்ல அநுமதி தர வேண்டும்!" என்றார் அப்புலவர்.

"அப்படியே நடக்கட்டும்!" என்றார் மன்னர்.

புலவர் கையில் கொண்டுவந்திருந்த ஓலையைப் பிரித்துப் படிக்கலுற்றார்:—

"இந்திரன் ஏறக் கரி அளித்தார்,—
பரிசு அளித்தார்
செந்திரு மேனித் தினகரற்கு,—
சிவனார் மணத்துப்
பைந்துகில் ஏறப் பல்லக்களித்தார்,—
பழையாறை நகர்ச்
சுந்தரச்சோழரை யாவரொப்பார்கள் இத்
தொன்னிலத்தே!"

பாடலைப் புலவர் படித்து முடித்ததும் சபையிலிருந்த மற்றப் புலவர்கள் எல்லாரும் சிரக்கம்ப கரக்கம்பம் செய்தும், 'ஆஹாகாரம்' செய்தும், "நன்று! நன்று!" என்று கூறியும் தங்கள் குதூகலத்தை வெளியிட்டார்கள்.

சுந்தரசோழர் முக மலர்ச்சியுடன் "இந்தப் பாடலின் பொருள் இன்னதென்பதை யாராவது விளக்கிச் சொல்ல முடியுமா?" என்றார்.

ஒரே சமயத்தில் பலர் எழுந்து நின்றார்கள். பிறகு நல்லன் சாத்தனாரைத் தவிர மற்றவர்கள் அனைவரும் உட்கார்ந்தார்கள். நல்லன் சாத்தனார் பாடலுக்குப் பொருள் கூறினார்:—

"ஒரு சமயம் தேவேந்திரனுக்கும் விருத்திராசுரனுக்கும் போர் நடந்தது. அதில் இந்திரனுடைய ஐராவதம் இறந்து போய் விட்டது. அதற்கு இணையான வேறொரு யானை எங்கே கிடைக்கும் என்று இந்திரன் பார்த்துக் கொண்டிருந்தான். கடைசியில் பழையாறை நகரில் வாழ்ந்த சுந்தர சோழ சக்கரவர்த்தியிடம் அவன் வந்து 'ஐராவதத்துக்கு நிகரான ஒரு

* அந்நாளில் பழையாறை நகருக்கு நந்திபுரி என்னும் பெயரும் உண்டு. சில காலத்துக்கு முன்பு சோழ மண்டலம் பல்லவர் ஆட்சியின் கீழ் இருந்தபோது நந்திபுரி என்னும் பெயர் பிரபலமாய் விளங்கியது. ஆகையினாலேயே இந்தப் பழம் பாடலில் நந்திபுரி மன்னர் என்று குறிப்பிட்டிருக்கிறது.

யானை வேண்டும்' என்று யாசித்தான். 'ஐராவதத்துக்கு நிகரான யானை என்னிடம் இல்லை. அதை விடச் சிறந்த யானைகள் தான் இருக்கின்றன!' என்று இந்திரனைத் தமது யானைக் கொட்டாரத்துக்கு அழைத்துச் சென்றார். அங்கே குன்றங்களைப் போல் நின்ற ஆயிரக்கணக்கான யானைகளைத் தேவேந்திரன் பார்த்துவிட்டு 'எதைக் கேட்பது?' என்று தெரியாமல் திகைத்து நின்றான். அவனுடைய திகைப்பைக் கண்ட சுந்தர சோழர் தாமே ஒரு யானையைப் பொறுக்கி இந்திரனுக்கு அளித்தார். 'அந்த யானையை எப்படி அடக்கி ஆளப் போகிறோம்? நம் வஜ்ராயுதத்தினால் கூட முடியாதே!' என்ற பீதி இந்திரனுக்கு உண்டாகிவிட்டதைக் கவனித்து, வஜ்ராயுதத்தை விட வலிமை வாய்ந்த ஓர் அங்குசத்தையும் அளித்தார்.......

"பின்னர் ஒரு காலத்தில், செங்கதிர் பரப்பி உலகுக்கெல்லாம் ஒளிதரும் சூரிய பகவானுக்கும் ராகு என்னும் அரக்கனுக்கும் பெரும் போர் மூண்டது. ராகு தினகரனை விழுங்கப் பார்த்தான். முடியவில்லை! தினகரனுடைய ஒளி அவ்விதம் ராகுவைத் தகித்து விட்டது. ஆனால் சூரியனுடைய தேரில் பூட்டிய குதிரைகள் ஏழும் ராகுவின் காலகோடி விஷத்தினால் தாக்கப்பட்டு இறந்தன. சூரியன் தன் பிரயாணத்தை எப்படித் தொடங்குவது என்று திகைத்து நிற்கையில், அவனுடைய திக்கற்ற நிலையைக் கண்ட சுந்தர சோழர் ஏழு புதிய குதிரைகளுடன் சூரிய பகவானை அணுகி 'ரதத்தில் இந்தக் குதிரைகளைப் பூட்டிக்கொண்டு சென்று உலகத்தை உய்விக்க வேண்டும்' என்று கேட்டுக் கொண்டார். தன் குலத்தில் வந்த ஒரு சோழ சக்கரவர்த்தி இவ்விதம் சமயத்தில் செய்த உதவியைச் சூரியனும் மிக மெச்சினான்.

"பின்னர், சிவபெருமானுக்கும் பார்வதி தேவிக்கும் கைலயங்கிரியில் திருமணம் நடந்தது. பெண் வீட்டார் கலியாண சீர்வரிசைகளுடன் வந்திருந்தார்கள். ஆனால் பல்லக்குக் கொண்டு வரத் தவறிவிட்டார்கள். ஊர்வலம் நடத்துவதற்கு எருது மாட்டைத் தவிர வேறு வாகனம் இல்லையே என்று கவலையுடன் பேசிக் கொண்டார்கள். இதை அறிந்த சுந்தர சோழ சக்கரவர்த்தி உடனே பழையாறை அரண்மனையிலிருந்து தமது முத்துப் பல்லக்கைக் கொண்டுவரச் சொன்னார். பயபக்தியுடன் சிவபெருமான் திருமணத்துக்குத் தம் காணிக்கையாக அப் பல்லக்கை அளித்தார். அப்படிப்பட்ட சுந்தர சோழ சக்கரவர்த்திக்கு உவமை சொல்லக் கூடியவர்கள் 'இந்த விரிந்து பரந்த அலை கடல் சூழ்ந்த பெரிய உலகத்தில் வேறு யார் இருக்கிறார்கள்?......"

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சுந்தர சோழ சக்கரவர்த்தி 'கலீர்' என்று சிரித்தார். நோயின் வேதனையினால் நெடுநாள் சிரித்தறியாத சக்கரவர்த்தியின் சிரிப்பு அவருடைய இணைபிரியாப் பத்தினியான மலையமான் மகள் வானவன்மாதேவிக்கும் தாதியர்களுக்கும் அரண்மனை வைத்தியருக்கும் கூடச் சிறிது உற்சாகத்தை அளித்தது.

கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையர் இத்தனை நேரமும் நின்று கொண்டேயிருந்தவர், சக்கரவர்த்தியைக் கைகூப்பி வணங்கி, "பிரபு! நான் பெரிய தவறு செய்து விட்டேன்; பிழை பொறுத்து மன்னிக்கவேண்டும்!" என்றார்.

"ஆ! தளபதியா பேசுகிறது? நீர் என்ன பிழை செய்தீர்? எதற்காக மன்னிப்பு? ஒருவேளை இந்திரனுக்கு நான் அளித்த வெள்ளை யானையையும் சூரியனுக்கு அளித்த குதிரைகளையும் திரும்பப் பறித்துக் கொண்டு வந்து விட்டீரோ? சிவபெருமானிடமிருந்து சிவிகையையும் பிடுங்கிக்கொண்டு வந்து விட்டீரோ? செய்யக் கூடியவர் தான் நீர்!" என்று சுந்தர சோழர் சொல்லி மீண்டும் சிரித்ததும், சக்கரவர்த்தியுடன் சேர்ந்து புலவர்களும் சிரித்தார்கள். எல்லாரையும் காட்டிலும் அதிகமாக வந்தியத் தேவன் சிரித்தான். அதைச் சின்னப் பழுவேட்டரையர் கவனித்து அவனை நோக்கிக் கடுமையாக ஒரு பார்வை பார்த்தார். உடனே, சக்கரவர்த்தியின் பக்கம் திரும்பிப் பார்த்துக் கூறினார்:—

"அரசர்க்கரசே! நான் செய்த பிழை இதுதான். இத்தனை காலமும்



நான் இவர்களைப் போன்ற புலவர் சிகாமணிகளைத் தங்களிடம் வரவொட்டாமல் தடை செய்து வைத்திருந்தேன். அரண்மனை மருத்துவர் சொற்படி செய்தேன். ஆனால் இப்போது அது பிழை என்று உணர்கிறேன். இந்தப் புலவர்களின் வரவினால் தங்கள் முகம் மலர்ந்தது. இவர்களுடைய பேச்சைக் கேட்டுத் தாங்கள் வாய்விட்டுச்சிரித்தீர்கள். அந்தக் குதூகலச் சிரிப்பின் ஒலியைக் கேட்டு உடைய பிராட்டியின் முகமும் தாதியரின் முகங்களும் மலர்ந்தன. நானும் மகிழ்ந்தேன். இவ்வளவு குதூகலம் தங்களுக்கு அளிக்கக் கூடியவர்களை இத்தனை நாள் தங்கள் சந்நிதானத்துக்கு வரவொட்டாமல் தடுத்தது என்னுடைய பெரும் பிழை தானே?......'' என்றார்.

"நன்று சொன்னீர், தளபதி! இப்போதாவது இதை நீர் உணர்ந்தீர், அல்லவா? 'வைத்தியர் சொல்லுவதைக் கேட்க வேண்டாம்; புலவர்கள் வருவதைத் தடுக்க வேண்டாம்' என்று உமக்கு நான் அடிக்கடி சொன்னதின் காரணம் தெரிகிறது அல்லவா?'' என்றார் சக்கரவர்த்தி.

அரண்மனை வைத்தியர் எழுந்து கைகட்டி வாய் புதைத்து ஏதோ சொல்லத் தொடங்கினார். அதைச் சுந்தர சோழர் சட்டைசெய்யாமல் புலவர்களைப் பார்த்து, "இந்த அருமையான பாடலைப் பாடிய புலவர் யார் என்று உங்களில் யாருக்காவது தெரியுமா? தெரிந்தால் சொல்லவேணும்!'' என்றார்.

நல்லன் சாத்தனார், "அரசர்க்கரசே! அதுதான் தெரியவில்லை! நாங்களும் அதைக் கண்டு பிடிக்க முயன்று




கொண்டுதானிருக்கிறோம். கண்டுபிடித்து அந்த மாபெரும் புலவருக்குக் 'கவிச்சக்கரவர்த்தி' என்று பட்டம் சூட்டவும் சிவிகையில் ஏற்றி அவரை நாங்கள் சுமந்து செல்லவும் சித்தமாயிருக்கிறோம். இதுகாறும் எங்கள் முயற்சி பலன் அளிக்கவில்லை!" என்று சொன்னார்.

"அதில் வியப்பு ஒன்றுமில்லை. நாலு வரி கொண்ட பாடலில் இவ்வளவு பெரும் பொய்களை அடக்கக் கூடிய மகா கவிஞர் தமது பெயரை வெளிப்படுத்திக் கொண்டு முன் வர விரும்ப மாட்டார்தானே?" என்று மகாராஜா கூறியதும், புலவர்களின் திருமுகங்களைப் பார்க்க வேண்டுமே! ஒருவர் முகத்திலாவது ஈ ஆடவில்லை. என்ன மறுமொழி சொல்லுவது என்றும் அவர்களுக்குத் தெரியவில்லை.

இந்த நிலைமையில் நமது வந்தியத்தேவன் துணிச்சலாக எழுந்து, "பிரபு! அப்படி ஒரே அடியாகப் பொய் என்று தள்ளி விடக்கூடாது. இல்லாத விஷயத்தைச் சாதாரண பாமர மக்கள் சொன்னால் அது பொய்; இராஜாங்க நிர்வாகத்தில் ஈடுபட்டவர்கள் அவ்விதம் சொன்னால், அது இராஜதந்திர சாணக்கியம்; கவிகள் அவ்வாறு கூறினால் அது கற்பனை, அணி அலங்காரம், இல்பொருள் உவமை............" என்றான்.

புலவர்கள் அத்தனை பேரும் அவன் பக்கமாகப் பார்த்து, "நன்று! நன்று!" என்று உற்சாகத்துடன் ஆர்ப்பரித்தார்கள்.

சக்கரவர்த்தியும் வந்தியத்தேவனை உற்று நோக்கி, "ஓ! நீ காஞ்சியிலிருந்து ஓலை கொண்டு வந்தவன் அல்லவா? கெட்டிக்காரப் பிள்ளை! நன்றாக என்னை மடக்கிவிட்டாய்!" என்றார். பிறகு சபையைப் பார்த்து, "புல

* பட்டத்து அரசியை 'உடைய பிராட்டி' என்று குறிப்பிடுவது அக்காலத்து மரபு.

வர்களே! பாடல் மிக அருமையான பாடலாக இருந்தாலும், அதைப் பாடியவரைக் கண்டு பிடிக்க வேண்டிய சிரமமும், அவருக்குக் கவிச் சக்கரவர்த்தி என்னும் பட்டம் சூட்டவேண்டிய அவசியமும் இல்லை. இதைப் பாடிய புலவரை எனக்குத் தெரியும். ஏற்கெனவே அவருடைய சிரஸின் பேரில் தூக்கமுடியாத கனமுடைய சோழ சாம்ராஜ்ய மணி மகுடம் உட்கார்ந்து அழுத்திக் கொண்டிருக்கிறது. 'புவிச் சக்கரவர்த்தி' 'திரிபுவன சக்கரவர்த்தி' 'ஏழுலகச் சக்கரவர்த்தி' என்னும் பட்டங்களையும் அந்தக் கவிராயர் சுமக்க முடியாமல் சுமந்து கொண்டிருக்கிறார்!'' என்றார் சுந்தர சோழர்.

இதைக் கேட்ட புலவர்கள் அத்தனை பேரும் ஆச்சரியக் கடலில் மூழ்கித் தத்தளித்தார்கள் என்று கூறினால், அதை வாசகர்கள் பொய் என்று தள்ளி விடக்கூடாது! ஆசிரியரின் கற்பனை, அணி அலங்காரம், இல்பொருள் உவமை,—என்று இவ்விதம் ஏதாவது ஒருவகை இலக்கணம் கூறி ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்!

## அத்தியாயம் 28

# இரும்புப் பிடி

திடீரென்று பொங்கிய புதுவெள்ளம் போன்ற ஆச்சரியத்தின் வேகம் சிறிது குறைந்ததும், புலவர் தலைவரான நல்லன் சாத்தனார், "பிரபு! அப்படியானால், இந்தப் பாடலை இயற்றிய கவி......" என்று தயங்கினார்.

"உங்கள் முன்னால், கால்களின் சுவாதீனத்தை இழந்து, நோய்ப் படுக்கையில் படுத்திருக்கும் புவிச் சக்கரவர்த்திதான்!" என்றார் சுந்தரசோழர்.

புலவர்களிடையே பலவித வியப்பொலிகளும் 'ஆஹா'காரமும் எழுந்தன. சிலர் தங்களுடைய மனோநிலையை எவ்விதம் வெளியிடுவது என்று தெரியாமல் தலையையும் உடம்பையும் அசைத்துக் கொண்டிருந்தார்கள். இன்னும் சிலர் தங்களுடைய மனோ நிலை இன்னதென்று தங்களுக்கே தெரியாமல் கல்லாய்ச் சமைந்திருந்தார்கள்!

சுந்தர சோழர் கூறினார்:—"புலவர் பெருமக்களே! ஒரு சமயம் பழையாறையில் புலவர்களும் கவிஞர்களும் என்னைப் பார்க்க வந்தார்கள். அந்தக் கூட்டத்தில் உங்களில் சிலரும் இருந்திருக்கலாம். ஒவ்வொருவரும் சோழ குலத்தின் வள்ளல் தன்மையைக் குறித்து ஒவ்வொரு பாடல் சொன்னார்கள். என்னைப் பற்றியும் பாடினார்கள். நான் 'இவருக்கு அதைக்கொடுத்தேன்' 'அவருக்கு இதை அளித்தேன்' என்றெல்லாம் பாடினார்கள். அச்சமயம் இளையபிராட்டி குந்தவையும் என் அருகில் இருந்தாள். புலவர்கள் பரிசில்கள் பெற்றுச் சென்றபிறகு அவர்கள் பாடிய பாடல்களை அரசிளங்குமரி புகழ்ந்து பாராட்டினாள். குந்தவையிடம் நான் 'புலவர்களையெல்லாம்விட என்னால் நன்றாகப் பாட முடியும்' என்று சபதம் கூறினேன். பிறகுதான் வேடிக்கையாக இந்தப் பாடலைப் பாடினேன். 'எனக்குப் பரிசு கொடு!' என்று கேட்டேன். குழந்தை என் முதுகின்மேல் ஏறி உட்கார்ந்து கொண்டு 'இந்தாருங்கள் பரிசு!' என்று கன்னத்துக்கு இரண்டு அறை கொடுத்தாள்! அது நேற்று நடந்தது போல் எனக்கு ஞாபகம் இருக்கிறது. ஆனால் ஆண்டு எட்டுக்கு மேல் ஆகிறது!......" என்றார்.

"விந்தை! விந்தை!" என்றும், "அற்புதம்! அற்புதம்!" என்றும் புலவர்கள் கூறி மகிழ்ந்தார்கள்.

குந்தவை என்ற பெயரைக் கேட்டதுமே வந்தியத் தேவனுக்கு மெய் சிலிர்த்தது. சோழ குலத்தில் பிறந்த அந்த இணையில்லாப் பெண்ணரசியின் எழிலையும் புலமையையும் அறிவுத்திறனையும்பற்றி அவன் எவ்வளவோ கேள்விப் பட்டதுண்டு.



அத்தகைய அதிசய அரச குமாரியைப் பெற்றெடுத்த பாக்கியசாலியான தந்தை இவர்; தாய் அதோ பக்கத்தில் அமர்ந்திருக்கும் மூதாட்டி. சுந்தர சோழர் தம் செல்வப் புதல்வியைக் குறித்துப் பேசும்போது எவ்வளவு பெருமிதத்துடன் பேசுகிறார்? அவர் குரல் எப்படித் தழுதழுத்து உருக்கம் பெறுகிறது?......

வந்தியத் தேவனுடைய வலக் கரம் அவனுடைய இடையைச் சுற்றிக்கட்டியிருந்த பட்டுத் துணிச் சுருளைத் தடவிப் பார்த்தது. ஏனெனில் குந்தவைப் பிராட்டிக்கு அவன் கொண்டு வந்திருந்த ஓலை அச்சுருளுக்குள் இருந்தது. தடவிப்பார்த்த கை திகைப்படைந்து செயலிழந்து நின்றது; அவனுடைய உள்ளம் திக்பிரமை கொண்டது. ஐயோ! இது என்ன? ஓலையைக் காணோமே? எங்கே போயிற்று?




எங்கேயாவது விழுந்து விட்டதோ? சக்கரவர்த்தியின் ஓலையை எடுத்த போது அதுவும் தவறி விழுந்திருக்கிருக்குமோ? எங்கே விழுந்திருக்கும்? ஒரு வேளை ஆஸ்தான மண்டபத்தில் விழுந்திருக்குமோ? அப்படியானால் சின்னப் பழுவேட்டரையரின் கையில் சிக்கி விடுமோ? சிக்கி விட்டால் அதிலிருந்து ஏதேனும் அபாயம் மூளைக்குமோ? அடடா? என்ன பிசகு! எத்தனை பெரிய தவறுதல்! இதிலிருந்து எப்படிச் சமாளிப்பது?......

குந்தவை தேவிக்குக் கொணர்ந்த ஓலை தவறி விட்டது என்று அறிந்த பிறகு வந்தியத் தேவனுக்கு அங்கு இருப்புக் கொள்ளவில்லை. மேலே நடந்த பேச்சு வார்த்தைகளும் அவன் காதில் சரியாக விழவில்லை; விழுந்ததும் மனதில் நன்கு பதியவில்லை.

சுந்தர சோழர் வியப்புக் கடலில் மூழ்கியிருந்த புலவர் கூட்டத்தைப் பார்த்து மேலும் கூறினார்:—

“நான் விளையாட்டாகச் செய்த பாடலைக் குந்தவை யாரிடமாவது சொல்லியிருக்க வேண்டும். ஒருவேளை பழையாறை திருமேற்றளி ஆலயத்தின் ஈசான்ய பட்டாச்சாரியாரிடம்

சொல்லி யிருக்கலாம். அவர் இப் பாடலை நாடெங்கும் பரவும்படிசெய்து என்னை உலகம் பரிகசிப்பதற்கு வழி செய்து விட்டார்!......"

"பிரபு! தாங்களே பாடியிருந்தால் என்ன? பாடல் அற்புதமான பாடல் தான்! சந்தேகமே யில்லை. தாங்கள் 'புவிச் சக்கரவர்த்தி'யா யிருப்பதோடு 'கவிச் சக்கரவர்த்தி'யும் ஆவீர்கள்!" என்றார் நல்லன் சாத்தனார்.

"ஆயினும், இச் சமயம் அதே பாடலை நான் பாடி யிருந்தால் இன்னொரு கொடையையும் சேர்த்திருப்பேன். இந்திரனுக்கு யானையும், சூரியனுக்குக் குதிரையும், சிவனாருக்குப் பல்லக்கும் கொடுத்ததோடு நிறுத்தி யிருக்கமாட்டேன். மார்க்கண்டனுக்காக மறலியைச் சிவபெருமான் உதைத்தார் அல்லவா? அந்த உதைக்கு யமன் தப்பித்துக் கொண்டான். ஆனால் அவனுடைய எருமைக் கடா வாகனம் சிவபெருமான் கோபத்தைத் தாங்காமல் அங்கேயே விழுந்து செத்து விட்டது. வாகன மில்லாமல் யமன் திண்டாடிக் கொண்டிருந்ததை யறிந்து பழையாறைச் சுந்தர சோழர் யமனுக்கு எருமைக் கடா வாகனம் ஒன்றை அனுப்பினார்!......இப்படி ஒரு கற்பனையும் சேர்த்திருப்பேன். அந்த எருமைக் கடாவின் பேரில் ஏறிக்கொண்டு தான் யமன் இப்போது ஜாம் ஜாம் என்று என்னைத்தேடி வந்து கொண்டிருக்கிறான். நமது தஞ்சைக் கோட்டைத் தளபதி சின்னப் பழுவேட்டரையரால் கூட யமதர்ம ராஜனையும் அவனுடைய எருமைக் கடா வாகனத்தையும் தடுத்து நிறுத்திவிட முடியாது அல்லவா?"

இப்படிச் சுந்தர சோழர் சொன்ன போது அவர் அருகில் வீற்றிருந்த உடையபிராட்டி வானவன்மா தேவியின் கண்களில் நீர் அருவி பெருகிற்று. அங்கிருந்த புலவர்களில் பலர் விம்மி அழத் தொடங்கி விட்டார்கள்.

சின்னப் பழுவேட்டரையர் மட்டுமே மனோ திடத்துடன் இருந்தார்.

"பிரபு! தங்களுடைய சேவையில் யமனுடன் போர் தொடுக்கவும் நான் சித்தமா யிருப்பேன்!" என்றார்.

"அதற்கு ஐயமில்லை, தளபதி! ஆயினும் யமனுடன் போர் தொடுக்



கும் சக்தி மானிடர் யாருக்கும் இல்லை. யமனைக் கண்டு அஞ்சாம லிருக்கத் தான் நாம் இறைவனைப் பிரார்த்திக்க வேண்டும். புலவர்களே! 'நமனை அஞ்சோம்' என்று தமிழகத்தின் தவப் புதல்வர் ஒருவர் பாடினார் அல்லவா?" என்றார் சக்கரவர்த்தி.

ஒரு புலவர் எழுந்து அப் பாடலைப் பாடினார் :—

"நாமார்க்கும் குடியல்லோம்
நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம்
நடலையல்லோம்
ஏமாப்போம் பிணியறியோம்..."

சக்கரவர்த்தி இந்த இடத்தில் குறுக்கிட்டு, "ஆகா! இறைவனைப் பிரத்

யட்சமாகத் தரிசித்த மகானைத் தவிர வேறு யாரால் இவ்வளவு துணிச்சலாகப் பாட முடியும்? அப்பர் சுவாமிகளுக்குக் கொடிய சூலை நோய் இருந்தது. இறைவன் அருளால் நோய் நீங்கிற்று. எனவே 'பிணியறியோம்' என்று பாடியிருக்கிறார்! புலவர்களே! என்னைப் பற்றியும் என் கொடைகளைப் பற்றியும் பாடுவதை நிறுத்தி விட்டு இனி இத்தகைய அருள் வாக்கைப் பாடுங்கள்! அப்பரும், சம்பந்தரும், சுந்தர மூர்த்தியும் இது போல் ஆயிரக்கணக்கான



பக்திமயமான இத் தமிழ்ப் பாடல்களைப் பாடியிருக்கிறார்கள். அப்பாடல்கள் எல்லாவற்றையும் ஒருங்கு சேர்த்தால் எவ்வளவு நன்றாயிருக்கும்? படித்தும் பாடியும் பரவசம் அடைவதற்கு ஓர் ஆயுட்காலம் போதாது அல்லவா?" என்றார்.

"அரசர்க்கரசே! தாங்கள் அநுமதித்தால் அந்தத் திருப்பணியை இப்போதே தொடங்குகிறோம்!"

"இல்லை; என்னுடைய காலத்தில் நடக்கக்கூடிய திருப்பணி அல்ல அது. எனக்குப் பின்னால்......" இவ்விதம் கூறித் தயங்கி நின்ற சுந்தர சோழர் சிந்தனையில் ஆழ்ந்தார்.

அரண்மனை மருத்துவர், சின்னப்பழுவேட்டரையரின் அருகில் வந்து அவர் காதில் ஏதோ சொன்னார்.

அதைக் கவனித்த சுந்தர சோழர் தூக்கி வாரிப் போட்டவரைப் போல் கண்ணை நன்கு விழித்துச் சபையோரைப் பார்த்தார். வேறொரு உலகத்திலிருந்து, மரணத்தின் வாசலிலிருந்து, யமனுலகக் காட்சியிலிருந்து, திடீரென்று திரும்பி வந்தவரைப் போல் சக்கரவர்த்தி தோன்றினார்.

"பிரபு! சங்கப் பாடல் ஒன்றைக் கேட்க வேண்டும் என்று தங்கள் விருப்பத்தைத் தெரிவித்தீர்கள். அதை மட்டும் சொல்லி விட்டு இவர்கள் போகலாமல்லவா?" என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

"ஆம், ஆம்; மறந்து விட்டேன். என்னுடைய உடல் மட்டும் அல்ல; உள்ளமும் சுவாதீனத்தை இழந்து வருகிறது. எங்கே? சங்கப் பாடலைச் சொல்லட்டும்!" என்றார் மன்னர்.

சின்னப் பழுவேட்டரையர் நல்லன் சாத்தனாருக்குச் சமிக்ஞை செய்தார். புலவர் தலைவர் எழுந்து கூறினார்:—

"அரசே! தங்களுடைய முன்னோர்களில் மிகப் பிரபலமானவர் கரிகால் பெருவளத்தார். இமயமலையில் புலிக் கொடியைப் பொறித்த மாவீரர். அவருடைய ஆட்சி காலத்தில் பூம்புகார்—காவேரிப்பட்டினம்—சோழ மகாராஜ்யத்தின் தலைநகரமாயிருந்தது. பற்பல வெளி நாடுகளிலிருந்தும் பற்பல பொருள்கள் மரக்கலங்களில் வந்து இறங்கியவண்ணமிருந்தன. பூம்புகாரின் செல்வப் பெருக்கையும் வளத்தையும் வர்ணிக்கும் சங்கப் புலவர் ஒருவர் இன்னின்ன நாட்டிலிருந்து இன்னின்ன பொருள்கள் வந்தன என்பதைத் தெளிவாகச்சொல்லியிருக்கிறார். அந்தப் பாடல் பகுதி இது:—

**வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்**<br>**குடமலைப் பிறந்த வாரமும் அகிலும்**<br>**தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்**<br>**கங்கை வாரியும் காவிரிப் பயனும்**<br>**ஈழத்து உணவும் காழகத் தாக்கமும்...**"

பாடலில் இந்த இடம் வந்தபோது சுந்தர சோழர் கையினால் சமிக்ஞை செய்யவே, புலவர் நிறுத்தினார்.

"தளபதி! கரிகால் வளவர் காலத்தில் ஈழநாட்டிலிருந்து தமிழகத்துக்கு உணவுப் பொருள் வந்து கொண்டிருந்தது என்று இப் பாடல் சொல்கிறது. அதை நான் அறிவதற்காகத்தானே இப் புலவர்களை அழைத்து வந்தீர்?"

"ஆம், அரசே!" என்று கோட்டைத் தளபதி கூறியது சிறிது சனஸ்வரத்தில் கேட்டது.

"அறிந்து கொண்டேன். இனி இப் புலவர்களைப் பரிசில்கள் கொடுத்து அனுப்பி விடலாம்!" என்றார் மன்னர்.

"புலவர்களே! நீங்கள் இப்போது விடை பெற்றுக் கொள்ளலாம்!" என்றார் கோட்டைத் தளபதி.

புலவர்கள் மன்னருக்கு "வாழி!" கூறிக் கோஷித்துக் கொண்டு புறப்பட்டுச் சென்றார்கள்.

குந்தவை தேவிக்குக் கொண்டுவந்த ஓலையைக் காணாததால் மனக் கலக்கம் அடைந்திருந்த வல்லவரையன், அப்புலவர்களுடனே தானும் நழுவி விடலாம் என்று எண்ணி எழுந்து கூட்டத்தின் நடுவில் நடந்து சென்றான்.

ஆனால், அவன் எண்ணம் நிறைவேறவில்லை. வாசற்படியை நெருங்கியபோது ஒரு வலிய இரும்புக் கை அவனுடைய கையின் மணிக்கட்டை இறுகப் பிடித்தது. வல்லவரையன் நல்ல பலசாலிதான்! ஆயினும் அந்த வஜ்ரப் பிடியின் வேகம் அவன் உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையில் ஒரு குலுக்குக் குலுக்கி அவனைச் செயலிழந்து நிற்கும்படி செய்து விட்டது.

அவ்விதம் பிடித்த இரும்புக் கரம் சின்னப் பழுவேட்டரையரின் கரந்தான் என்பதை நிமிர்ந்து பார்த்துத் தெரிந்து கொண்டான்.

புலவர்கள் தரிசன மண்டபத்திலிருந்து வெளியேறினார்கள். (தொடரும்)

# பிடில் கோவிந்தசாமிப் பிள்ளை

துரையப்பப் பாகவதர்

மேல் நாட்டினரால் இந்தியாவுக்குக் கொண்டு வரப்பட்ட அநேக வாத்தியங்களில் பிடில் முக்கியமானது. முதன் முதலில் பிடில் வாத்தியத்தில் கர்நாடக சங்கீதத்தை வாசித்துக் காண்பித்தவர் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் சகோதரரான பாலுசாமி தீக்ஷிதர்தான். பிறகு பிடில் வாத்தியத்தில் அபார திறமையோடு வாசித்தவர்களில் திருக்கோடிகாவல் கிருஷ்ணய்யர், கரூர் பெரிய தேவுடு ஐயர், திருச்சி கோவிந்தசாமிப் பிள்ளை மூவரையும் முக்கியமாய்க் குறிப்பிட வேண்டும்.

திருச்சி கோவிந்தசாமிப் பிள்ளையின் பாணி பிரத்தியேகமானது. மற்றவர்களால் சுலபத்தில் சாதிக்கக் கூடியதல்ல. அவரிடம் அநேக வருஷ காலம் குருகுலவாசம் செய்து பயின்ற பாப்பா வெங்கட்டராமய்யரிடம் கூட, பிள்ளையவர்களின் பாணியில் உள்ள சிற்சில அம்சங்களைத்தான் நாம் இன்று கேட்டு ஆனந்திக்க முடிகிறது என்பது ரஸிகர்களின் அபிப்பிராயம். இப்படியாக சங்கீத உலகில் தமக்கென்று தனிப் பெயரை நிலைநாட்டிக் கொண்ட கோவிந்தசாமிப் பிள்ளையவர்கள் இசை வேளாளர் மரபில் பிறந்தார். இளம் வயதில் சீர்காழி நாராயணசாமிப் பிள்ளையிடம் பிடில் கற்றுக்கொண்டார். பிறகு திருச்சி நீலாம்பாளின் பரதநாட்டியக் கச்சேரிக்குச் சில காலம் பிடில் வாசித்தார். அதன் பிறகு சென்னையில் தங்கியிருந்து பிரசித்த வித்வான்களாகிய பட்டணம் சுப்பிரமணிய ஐயர், சரப சாஸ்திரிகள், திருக்கோடிக்காவல் கிருஷ்ணய்யர், வீணை தனம் ஆகியோரின் சங்கீதங்களைக் கேட்டு, தம்முடைய ஞானத்தினாலும்—இடைவிடா உழைப்பினாலும் சங்கீதக் கச்சேரிகளில் பக்க வாத்தியம் வாசிக்க முன்வந்தார்.

சரப சாஸ்திரிகள், ராமநாதபுரம் சீனிவாஸ ஐயங்கார், கோனேரி ராஜபுரம் வைத்தியநாதய்யர், பாலக்காடு அனந்தராம பாகவதர், பல்லடம் சஞ்சீவிராவ், கல்லிடைக்குறிச்சி வேதாந்த பாகவதர், மதுரை புஷ்பவனமய்யர், கும்பகோணம் நாகராஜ ராவ் ஆகியோரின் கச்சேரிகளுக்கு வாசித்துப் புகழடைந்தார். இதே காலத்தில் தனிப் பிடில் கச்சேரிகளையும் செய்து ரஸிகர்களின் உள்ளங்களைக் கவர்ந்தார். அந்தக் காலத்தில் இளம் வித்துவான்களுக்கும் வாசித்து அவர்களையும் உற்சாகப்படுத்தினார். பெரிய வித்துவான்களின் சங்கீதக் கேள்வியின் பலத்தினாலும் ஞானம்—சாதகம் இவைகளினாலும் சம்பிரதாய சங்கீத முறைகளிலிருந்து கொஞ்சமும் வழுவாது அவர் வாசித்து வந்ததால், அவர் மறைந்து சுமார் இருபது வருஷங்களாகியும் அவருடைய வாசிப்பின் சுவையை இன்றும் மறக்க முடியவில்லை.

அவருடைய வாசிப்பில் உள்ள கன நயங்கள் சந்தர்ப்பங்களுக்கேற்ப அற்புதமாகப் பிரகாசித்தன. ராகவின்யாஸம் செய்கையில் பிள்ளை அவர்களின் இணையற்ற ஞானமும் சாதக பலமும் ஒளி வீசிப் பிரகாசிக்கும். அவர் வாசிக்கும் ஸ்ரவல்களும் ஸ்வரக் கற்பனைகளும் அவருடைய கற்பனா ஞானத்தையும் காலப் பிரமாண சுத்தத்தையும் பிரகடனம் செய்யும். அவர் வாசித்த தானங்கள் அவரை பிடில் வாத்தியத்தில் இணையற்ற சூரன் என்று மெய்ப்பித்தன. ஆதியில் சில காலம் புல்லாங்குழல் பிடில் இரண்டையும் இடைவிடாது சாதகம் செய்து கச்சேரிகள் செய்து வந்தார். பிறகு, புல்லாங்குழலை நிறுத்திக் கொண்டு தமது கவனம் முழுவதையும் பிடில் சாதகம் செய்வதில் செலுத்தினார். அத்துடன் மிருதங்கம், தபேலா ஆகிய வாத்தியங்களிலும் நல்ல தேர்ச்சியுண்டு. பிள்ளை அவர்கள் மிருதங்கம் வாசித்தால் பழைய தஞ்சாவூர் மிருதங்க பாணியின் சாயைகளும்—தபேலா வாசித்தால் வடநாட்டாரின் பாணிகளும் பரிபூர்ணமாய் விளங்குவதைக் காணலாம்.

காலையில் ஒன்பது மணி சுமாருக்குப் பிடில் சாதகம் செய்ய ஆரம்பித்தால் பகல் ஒரு மணி வரையில் வாசித்துக் கொண்டே இருப்பார். இதேபோல் மாலை, இரவு வேளைகளிலும் சாதகம் செய்வார். வாத்தியம் வாசிப்பவர்களுக்கு வாசிப்பில் இம்மியளவு கூட நழுவல் ஏற்படாமலிருக்க, இடைவிடாத சாதகம் மிகவும் அவசியம் என்பதை உணர்ந்து கடைசி வரையில் இடைவிடாது சாதகம் செய்து வந்தார்.

இவர் பக்கவாத்தியம் வாசிக்கும் ஒவ்வொரு சமயங்களில் பிரதான வித்துவானுடைய கற்பனைகளுக்கு ஈடு கொடுத்து வாசிப்பதுடன் தம்முடைய வாத்தியம் ஓங்கி நிற்கும்படியும் வாசித்து ரஸிகர்களைக் கவர்ந்து விடுவார். ஆகவே தங்கள் கச்சேரிகளில் பிள்ளையவர்களின் பிடில் ஏற்பாடாயிருப்பதைக் கேட்ட வித்துவான்கள் ஒருவிதத்தில் சந்தோஷமும் இன்னொரு விதத்தில் 'பாடிப் பெயரெடுக்க வேண்டுமே' என்ற கவலையும் அடைவதுண்டு. அம்மாதிரியான கச்சேரிகளைக் கேட்க நேர்ந்த ரஸிகர்கள், "ஆஹா! பாடகர் இவ்வளவு அழகாயும் கற்பனையுடனும் பாடிவிட்டாரே! இதற்கு மேல் கோவிந்தசாமிப் பிள்ளை என்னத்தை வாசித்துக் களைகட்ட முடியும்!" என்று ஆவலாய்க் காத்துக் கொண்டிருக்கையில், பாடகர்களின் கற்பனைகளை இருந்த இடம் தெரியாமல் போகும்படி வாசித்து விடுவார். இதனால் பாடகர்கள் மிகப் பிரயத்தனம் செய்து தங்கள் பெயரைக் காப்பாற்றிக் கொள்ளும்படி நேர்ந்துவிடும்.

அந்தக் காலத்துச் சம்பிரதாயப்படி, பிரதான வித்துவான் ராகத்தை ஆலாபனம் செய்கையில் பிள்ளையவர்கள் அந்தக் கற்பனைகளை அமரிக்கையாய்க் கேட்டுக் கொண்டு ஒவ்வொரு கற்பனையின் முடிவிலும் கொஞ்சம் கொஞ்சம் சேர்ந்து வாசிப்பாரேயன்றி, பாடும் சமயங்களில் சாதாரணமாய் வில்லைப் போட்டுக் கொண்டுதானிருப்பார். முழுவதும் கூடவே வாசிப்பது என்பது கிடையாது. இதனால் பிரதான வித்துவான்களுடைய கற்பனைகள்

இன்னவை என்பது ரஸிகர்களுக்கும் நன்கு விளங்கும். பாடுபவருக்கும் கற்பனைகள் தங்கு தடையின்றி வந்து கொண்டேயிருக்கும். அவைகளைக் கவனமாகக் கேட்டு ஆனந்தித்த பிறகு, அவர்களால் கையாளப்படாத கற்பனைகளைப் பிள்ளையவர்கள் அள்ளி வீசும் போது, ரஸிகர்கள் மெய் மறந்து மகிழ்வார்கள்.

தற்காலத்திய கச்சேரிகளில் வித்துவான்கள் பாட ஆரம்பித்தவுடனேயே, அவர் இன்னது தான் பாடப் போகிறார் என்பதைத் தாங்கள் அறிந்து கொண்டு விட்டதாய் எண்ணி, சில பக்க வாத்தியக்காரர்கள், பாடகருடன் சேர்ந்தும் சேராமலும் வாசித்துக் குழறிவிடுகிறார்கள். இதனால் பாடகருடைய மனோதர்மங்களை ரஸிகர்களால் முழுவதும் அனுபவிக்க முடிவதில்லை. சிலர் பாடகர் பாடும் ஒவ்வொரு சங்கதிகளையும் உடனுக்குடன் அப்படியே வாசித்துக் காண்பித்துக் கச்சேரியைப் பள்ளிக்கூடமாக்கி விடுகிறார்கள். இதனால் பக்க வாத்தியக்காரர்களின் மனோதர்மம் அபிவிருத்தியடைய வழியில்லாமல் போய்விடுகிறது.

அந்தக் காலத்திய கச்சேரிகளைக் கேட்டு அனுபவித்த ரஸிகர்களுக்கு, இந்த நாளையக் கச்சேரிகளைக் கேட்கையில் போதிய இன்ப உணர்ச்சி உண்டாவதில்லை. அந்நாள் கச்சேரிகளில் சுகபாவம், கற்பனா சக்தி முதலியவைகள் நிரம்பி யிருந்தன. தற்காலத்திலோ பெரும்பாலான கச்சேரிகளில் கற்பனையும் இன்பமும் இல்லாத சப்த ஜாலங்கள்தான் மலிந்து கிடக்கின்றன.

ஸ்ரீ கோவிந்தசாமிப் பிள்ளை, கீர்த்தனைகளைப் பாடகர் பாடும்போது தமக்கும் அதே பாடம் இருந்தாலன்றித் தொடர்ந்து வாசிப்பதில்லை. ஆங்காங்கு அநுசரித்து வாசிப்பதோடு நிறுத்திக் கொள்ளுவார். இதனால் கீர்த்தனங்களின் பாவமும் உருவமும் நன்கு விளங்கின.

அநேக பிடில்காரர்கள் வாசிப்பது நிரவலா அல்லது கற்பனை ஸ்வரமா என்பதைக் கண்டுபிடிப்பது சிரமம். சில பிடில்காரர்கள் பாடகர் அரையாவர்த்தம், ஓராவர்த்தம், இரண்டாவர்த்தம் என்று படிப்படியாய் ஸ்வரம் பாடும்போது அதேபோல் வாசிப்பதில்லை. அரையாவர்த்தம் பாடிவிட்டால் இரண்டாவர்த்தமும், ஓராவர்த்தம் பாடிவிட்டால் நான்காவர்த்தமும் வாசிக்கிறார்கள். இதனால் பாடகருடைய கற்பனைகளும் ரஸிகர்களின் ஆனந்த உணர்ச்சியும் பங்கமடைகின்றன. இத்தகைய அசந்தர்ப்பங்கள் கோவிந்தசாமிப் பிள்ளையின் கச்சேரிகளில் கொஞ்சமும் இருந்ததில்லை.

சில சமயங்களில் பாடகர் அபரிமிதமாய்ப் பாடிச் சபையில் ஆரவாரம் ஏற்படும்போது கோவிந்தசாமிப் பிள்ளையவர்கள் உடனேயே தொடர்ந்து வாசிக்கும் வழக்கம் இல்லை. ஒன்று அல்லது இரண்டு நிமிஷங்கள் சுருதி சேர்ப்பது போல் சபையோருக்கு அவகாசம் கொடுத்து ஏற்கெனவே ஏற்பட்ட ஆரவாரம் அடங்கின பிறகே வாசிக்க ஆரம்பிப்பார். இதனால் ரஸிகர்களின் முழு கவனத்தையும் அவர் தம்பால் இழுத்துக் கொண்டு ஏற்கெனவே பாடகரின் கற்பனைகள் செலுத்தப்படாத இடங்களில் தமது மனோ தர்மங்களை அள்ளி வீசும்போது சபையோர்கள் மெய் மறந்து போவார்கள்.

பிள்ளையவர்களின் தனிப்பிடில் கச்சேரிகள், நாதமயமாயும் ஸ்வர தேவதைகளே தாண்டவமாடுகின்றனவோ என்று எண்ணும்படியும் இருக்கும். சம்பிரதாய சங்கீதத்தின் பூர்ணமான எழிலையும் பருகி ஆனந்திக்கலாம். பிள்ளையவர்களின் தனிக் கச்சேரிகளில் மிருதங்கம் அழகநம்பியாப் பிள்ளையவர்கள் வாசிக்கும்போது ரஸிகர்கள் பாடு கொண்டாட்டமா யிருக்கும்.

பிள்ளையவர்கள் நல்ல ஸரஸி. மிகுந்த கண்ணியமாக எல்லோரிடமும் பழகுவார். எவரிடமும் அதிகமாகவும் அனாவசியமாகவும் பேசமாட்டார். இதர வித்துவான்களைப் பற்றிய தமது அபிப்பிராயங்களை ஒருபோதும் வெளியிடும் வழக்கம் இல்லை. தொழில் விஷயங்களில் மிகுந்த கண்டிப்புள்ளவர். சன்மான விஷயங்களில் பேரம் செய்ய மாட்டார். ஸ்ரீ தியாகப் பிரம்மத்திடம் மட்டற்ற பக்தியுடையவர். ஆகையால் தமது உடல் பொருள் ஆவி எல்லாவற்றையும் அந்த உற்சவக் கைங்கரியத்தில் சமர்ப்பணம் செய்ய ஒருபோதும் பின் வாங்கியதில்லை.

1920-ம் வருஷத்திலிருந்து தியாகப் பிரம்ம உற்சவ விஷயமான முழுப் பொறுப்பும் நமது பிள்ளையவர்களுக்கே ஏற்பட்டு விட்டது.

வசூல் இனங்கள் குறைந்து செலவு இனங்கள் நாளுக்கு நாள் அதிகமாகிக் கொண்டு வந்தபடியால், பிள்ளையவர்கள் தம்முடைய வருமானத்தில் பெரும்பாகத்தை இந்த உற்சவ கைங்கரியத்திற்கே செலவழித்து வந்தார். உண்மையில் அந்த உற்சவ சம்பந்தமான எல்லாச் செலவுகளையும், தாமே ஏற்றுக்கொள்ள ஒவ்வொரு வருஷமும் அவர் தயாரா யிருந்தார். இதனால் எல்லா சங்கீத வித்துவான்களும் பிள்ளையவர்களிடம் மிகுந்த மரியாதையுடனும் அன்புடனும் பழகி வந்தார்கள். திருவையாறு உற்சவ காலத்தில் ஐந்து நாளும் பாலும் பழமும் மட்டும் உண்டு உற்சவத்தை நிர்வகித்து அது முடிந்த பிறகுதான் அவர் உணவு உட்கொள்ளுவார். இம்மாதிரியான சில கட்டுப்பாடுகளை அவர் உற்சவக் கச்சேரிகள் விஷயத்திலும் அநுசரித்து வந்தார். உற்சவ நிர்வாக விஷயங்களில் இவருக்கு வலது புஜம் போல் இருந்து உதவிய கீரனூர் சகோதரர்கள், திருவிடை மருதூர் வீருசாமிப் பிள்ளை, திருவிழிமிழலை சகோதரர்கள், நீடாமங்கலம் மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை முதலியவர்கள் மிகுந்த பக்தி மரியாதையுடன் நடந்துகொள்ளுவார்கள்.

இப்படியாக அவர் சங்கீத உலகிற்கே ஓர் உதாரண புருஷராக விளங்கி வந்தார். கலை விஷயத்தில் அவருக்கிருந்த ஆர்வம் மற்ற விஷயங்களில் இல்லை என்றே சொல்லலாம்.

கலைக்குத் தொண்டு செய்வதையே தமது நோக்கமாக எண்ணினாரே யன்றி, தமது கலையை சமஸ்தானங்களிலும், மகாராஜாக்களிடமும், ஜமீன்தார்களிடமும் பிரகடனம் செய்து அதன்மூலம் விசேஷமான பெயரும், புகழும், பணமும் பெற எண்ணியதேயில்லை. எவ்வளவு பெரிய இடமானாலும் அழைப்பில்லா

மல் போகமாட்டார். சங்கீதக் கலையில் மிகுந்த ரஸிகராய் விளங்கிய மைசூர் மகாராஜா அவர்களிடம், தசரா முதலான சந்தர்ப்பங்களில் சன்மானம் பெறாத பெரிய வித்துவான்களே அந்தக் காலத்தில் இருந்ததில்லை. அவ்வளவு சங்கீத வித்துவான்களையும் ஆதரித்த மகாராஜாவுக்குக் கோவிந்தசாமிப் பிள்ளையவர்களின் வாசிப்பைக் கேட்க வேண்டும் என்ற அவா உண்டாயிற்று. உடனே அவரை வரவழைக்க உத்தரவிட்டார். இந்த அழைப்பை ஒரு சமஸ்தான வித்துவான் மூலம் பெற்ற பிள்ளையவர்கள் குறிப்பிட்ட தேதி தமக்குச் சௌகரியந்தான் என்றும் ரூபாய் 750 தமக்குச் சன்மானமாக அளிக்கப்பட வேண்டும் என்றும் பதில் அனுப்பினார். இதை எப்படி மகாராஜாவிடம் தெரிவிப்பது என்று சமஸ்தான வித்துவான் தத்தளித்தார். மகாராஜாவோ அவரிடமிருந்து பதில் வந்ததா என்று கேட்டதுடன் உடனே புறப்பட்டு வரும்படியும் தந்தியடிக்கச் சொல்லிவிட்டார்.

கோவிந்தசாமிப் பிள்ளையின் வாசிப்பைக் கேட்ட மகாராஜா பரம சந்தோஷத்தையடைந்தவராய்ப் பிள்ளையவர்கள் கோரிய சன்மானத்துடன் இரண்டு பட்டு சால்வைகளையும் அளித்தார். சமஸ்தான வித்துவான்களில் சிலர் மகாராஜாவினிடம் தொகையைக் குறிப்பிட்டதினால்தான் பிள்ளையவர்களின் சன்மானம் குறைந்து விட்டது, இல்லாவிடில் ஆயிரக்கணக்கில் சன்மானம் செய்து, விசேஷமாய்க் கௌரவித்திருப்பார் என்றும் சொன்னார்கள். இதைக் கேட்ட பிள்ளையவர்கள் "எனக்கு இந்தச் சன்மானமே போதுமானது. மகாராஜா எனக்கு அதிகமாகக் கொடுப்பார் என்பதற்காக நான் இங்கு தங்கி அவருக்குச் சௌகரியமான சந்தர்ப்பங்களில் அங்கு போய் வாசித்து அவரைத் திருப்தி செய்ய என்னுடைய சௌகரியம் எப்படி யிருக்குமோ! ஆகவே இப்போது நடந்ததே போதுமானது" என்றார். இதே போல் ஜமீன்தார்கள் அல்லது பிரபுக்கள் பிள்ளையவர்களை வரவழைக்க எண்ணும்போது அவர்களுடைய கௌரவத்திற்கும் தம்முடைய கலையின் மதிப்புக்கும் குறைவின்றி அவர்கள் நடந்து கொள்ளுவார்கள் என்று தெரிந்தாலன்றிப் போகவே மாட்டார்.

தம்மிடம் அன்புள்ள நண்பர்களுக்கு இவர் கட்டுப்படுவதுபோல் மற்ற வித்துவான்களால் இயலாது என்றே சொல்லலாம். சாதாரண ஸ்திதியிலுள்ள ஒரு நண்பர் தம் பெண்ணின் கல்யாணம் நிச்சயமான சமாசாரத்தைப் பிள்ளையவர்களுக்குத் தெரிவித்தார். ஆனால் முகூர்த்தத் தேதியை அவர் தெரிவிக்கவில்லை. பிள்ளையவர்களுக்கு, அந்தத் தேதியில் வரக்கூடிய பெரிய கச்சேரிகளுக்கு இது இடைஞ்சலா யிருக்கக்கூடாதென்று தமது நண்பர் வெகு இங்கிதமாய் இருப்பது தெரிந்து விட்டபடியால் அவரிடம் எப்படியோ முகூர்த்தத் தேதியைக் கேட்டறிந்து கொண்டு அந்தத் தேதியில் தாமும் இதர இடங்களில் ஒப்புக்கொள்ளாததுடன் அந்தத் தேதியில் ஒழிவுள்ள வித்துவான்களைத் தாமே ஏற்பாடு செய்து, நண்பர் வீட்டுக் கல்யாணத்தில் கச்சேரி செய்து பரிமளிக்கச் செய்தார்.



பாகவதர்:—"எத்தனையோ சபாவில் கேட்டுப் பார்த்து விட்டேன். ஒரு சபையிலும் கச்சேரிக்குச் 'சான்ஸ்' கிடைக்கவில்லை!"

மனைவி:—"என்னமோ! 'ஐ. நா. சபை' என்று சொல்லுகிறார்களே, அந்தச் சபையைக் கேட்டுப் பார்க்கிறதுதானே?"

---

தஞ்சாவூரில் பிள்ளையவர்கள் சில வருஷ காலம் வசித்து வந்தார். அந்தச் சமயம் ராவ்ஸாஹேப் ஆபிரகாம் பண்டிதரின் அழைப்புக் கிணங்கி அநேக சங்கீத வித்துவான்கள் சங்கீத விஷயமான சர்ச்சைகளில் ஈடுபட்டு அவர் நடத்திய சங்கீத மகாநாடுகளில் பங்கெடுத்துக் கொண்டார்கள். மாங்குடி சிதம்பர பாகவதர் ஒரு முறை இந்த மகா நாட்டிற்கு வர எண்ணி, தஞ்சைக்கு வந்து தமது நண்பராகிய பிள்ளையவர்களையும் அங்கே போகலாம் என்றழைத்தார். இதைக் கேட்ட பிள்ளையவர்கள் "ஏதோ நான் கொஞ்சம் பிடில் வாசிப்பேனே யன்றி எனக்குப் பேசத் தெரியாது! தவிர சங்கீத சம்பந்தமாய்ப் பேசுவதற்கு என்னதான் இருக்கிறது!" என்று பதிலளிக்கவும் மிகுந்த மகிழ்ச்சி யடைந்த பாகவதர் பிள்ளையவர்களை பிடில் வாசிக்கச் சொல்லிக் கேட்டு ஆனந்தித்து ஊர் திரும்பினார்.

* * *

பிள்ளையவர்களின் தாயார் கால மானதையறிந்த அத்தியந்த நண்பராகிய ஒரு பிரபு பிள்ளையவர்களுக்கு உபகாரமா யிருக்கட்டும் என்றெண்ணி ரூ. 500 இன்ஷ்யூர் செய்து அனுப்பியிருந்தார். இதைப் பெற்றுக்கொண்ட பிள்ளையவர்கள் அதில் உள்ள தொகையுடன் ஒரு கடிதத்தையும் வைத்து மறு தபாலில் இன்ஷ்யூர் செய்து திருப்பி அனுப்பிவிட்டார். கடிதத்தில் சுருக்கமாய் "தாங்கள் இந்தச் சமயம் பணம் அனுப்பி உதவ முன் வந்ததை நான் என்றும் மறக்க மாட்டேன். ஆனால் இப்போது என்னிடம் வேண்டிய அளவு பணம் இருப்பதால் தேவை ஏற்படும்போது நான் தங்களிடம் வாங்கிக் கொள்ளுகிறேன். தங்கள் அன்புக்கு மீண்டும் நன்றி செலுத்துகிறேன்"

என்று எழுதிவிட்டார். இதைக் கண்ட அவருடைய நண்பர்கள் ஆச்சரிய மடைந்தனர்.

* * *

ஒரு சமயம் பிள்ளையவர்களின் தனிப் பிடில் கச்சேரி திருவாவடுதுறை மடத்தில் ஏற்பாடாகி யிருந்தது. அன்று அழக நம்பியாப் பிள்ளையின் மிருதங்கம். இந்த இன்னிசை விருந்தை அனுபவிக்க ஆவல் கொண்ட ஓர் இசை வேளாளர் சுமார் பத்து மைல்களுக் கப்பாலுள்ள கிராமத்திலிருந்து வந்திருந்தார். மடத்து வாயில் காப்போனோ தனக்கு இரண்டு ரூபாய் கொடுத்தாலன்றி உள்ளேபோக அனுமதிக்க முடியாதென்று சொல்லிவிட்டான். அவரிடம் போதிய பணம் இல்லாததால் மிகவும் ஆலோசனை செய்து, தமக்கு ஏற்கெனவே கோவிந்தசாமிப் பிள்ளையைத் தெரியாதென்றாலும், அவர் இறங்கியிருந்த ஜாகைக்கு வந்து, தம்முடைய அவாவையும் நடந்த விஷயங்களையும் தெரிவித்தார். இதைக் கேட்ட பிள்ளையவர்கள் அவரைத் தம்மோடு இருக்கச் செய்து கச்சேரிக்குப் போகும்போது கூடவே அழைத்துப் போனார். அவரும் சந்தோஷத்துடன் இவர்கள் ஜமாவுடன் பின்னால் வருகையில் வாயில் காப்போன் தடுத்து நிறுத்தி விட்டான். உள்ளே சென்ற பிள்ளையவர்கள் அவர் கூட வராததைக் கவனித்து, உடனே வெளிப்பக்கம் வந்து வெற்றிலை பாக்கைக் கொப்பளித்துத் துப்பிக் கொண்டிருந்தார். கச்சேரி ஆரம்பிக்கலாம் என்று சொல்வதற்காகப் பிள்ளையவர்களைத் தேடிக் கொண்டு கட்டளைத் தம்பிரானும் வெளியில் வந்தார். பிள்ளையவர்கள் தம்பிரானிடம் அந்த இசை வேளாளரைச் சுட்டிக் காட்டி "அவரை உள்ளே அழைத்துப் போங்கள்; இதோ வந்து விட்டேன்" என்றார். மிகுந்த குதூகலத்தை யடைந்த இசை வேளாளர் இஷ்டப்படி இன்னிசை விருந்தை யனுபவித்துத் திரும்பினார்.

* * *

திருவையாறு ஸ்ரீ தியாகப்பிரம்ம உற்சவத்தில் நடைபெறும் கச்சேரிகளை இவர் உட்கார்ந்த இடத்தில் இருந்து கொண்டே அவ்வப்போது ஏற்பாடு செய்து கொண்டிருப்பார். கூடியவரை தகுந்த பக்கவாத்தியங்களையே தேர்ந்தெடுப்பார். சில சமயங்களில் ஒரு குறிப்பிட்ட பாடகருக்குத் தாம் உத்தேசித்த பக்க வாத்தியக்காரர்கள் வாசிப்பதற்கு யோசிப்பதாய்த் தெரிந்து விட்டால், உடனே தாமே உட்கார்ந்து வாசிக்க ஆரம்பித்து விடுவார். ஆகவே அவருடைய விருப்பத்திற்கு மாறாக எந்த வித்துவானும் நடப்பதில்லை.

பிள்ளையவர்கள் தாம் ஒப்புக் கொண்ட கச்சேரிகளை நடத்தி வைக்கும் விஷயத்தில் செலவுகளை விடத் தம்முடைய நாணயம் காப்பாற்றப் படவேண்டும் என்பதையே கவனிப்பார்.

பிள்ளையவர்கள் இசைக் கலைக்கு சுமார் முப்பது வருஷங்கள் இணையற்ற தொண்டாற்றி, பிடில் வாத்தியத்தில் ஒரு வழிகாட்டியாக விளங்கியதுடன் ஸ்ரீ தியாகப்பிரம்ம உற்சவத்தைக் கடைசி காலம்வரை திறமையாக நிர்வகித்து நடத்திப் புகழுடம் பெய்தினர்.

# அன்பின் நினைவு

எஸ். கிருஷ்ணன்

**ப**ரசுராமன் அன்று மாலை 'கிளப்'பில் நண்பர்களுடன் பேசிக் கொண்டிருந்த பொழுது ஒரு நண்பர், "தீபாவளிக்கு ஜவுளி வாங்கினதிலே ஆயிரம் ரூபாயாகி விட்டது. நம் என்ஜினீயர் மாதிரி இருந்தால் இந்த வம்பில்லை யல்லவா?" என்று இன்னொரு நண்பரைக் கேட்டார். அதற்கு மற்ற நண்பர், "ஆனால் என் அபிப்பிராயத்தில் சுக துக்கங்கள் கலந்த குடும்ப வாழ்வில்தான் நிறைவிருக்கிறது. ஏகாந்த வாழ்க்கையில் சுவை ஏது?" என்று கேட்டார். முதல் நண்பர் பரசுராமனிடம், "ஏன் ஸார்! எத்தனையோ ஜில்லா போர்டின் பாதைகளைச் சீர் திருத்தும் என்ஜினீயர் ஆன உங்களால் உங்கள் வாழ்க்கைப் பாதையைச் சீர்படுத்த முடியாதா, என்ன?" என்று கேட்டார். பரசுராமன் அந்தக் கேள்விக்கு மறுமொழி கூறாமல் அங்கிருந்து எழுந்து வெளியே வந்து விட்டான். நாளை மறுநாள் வரும் தீபாவளியை இன்றே அழைத்துக் கொண்டு குழந்தைகள் பட்டாசு சுடுவதையும் மத்தாப்புக் கொளுத்துவதையும் பார்த்துக் கொண்டே பரசுராமன் பாதையில் நடந்தான்.

அந்தக் கொம்மாளம் அடிக்கும் குழந்தைகளின் உள்ளத்தில்தான் எத்தனை உற்சாகம்! எவ்வளவு உவகை! பரசுராமன் நீண்ட ஒரு பெருமூச்சு விட்டான். ஆனால் இழந்த பிள்ளைப் பருவம் மீண்டும் வரவா போகிறது? அதே சமயம் அன்று காலை அவனுக்குக் கிடைத்த ஒரு கடிதம் ஞாபகத்துக்கு வந்தது. அவனுடைய குழந்தைப் பருவத் தோழி லலிதா 'அண்ணாவை' அன்புடன் தீபாவளிக்கு வரச் சொல்லி அழைத்திருந்த கடிதம் அது. அவளுக்குப் பரசுராமன் விலாசம் எப்படித் தெரிந்ததோ? அவள் கணவன் மதுரையில் பெரிய மண்டிக் கடை வைத்திருக்கிறானாம். இரண்டு வயதில் ஒரு மகன் இருக்கிறானாம்.

தனிமை சூழ்ந்த வாழ்விலிருந்து ஒரு நாளாயினும் தப்பித்துக் கொள்ள லலிதாவின் வீட்டுக்குப் போகலாமே என்றது அவன் மனம். கடைவீதியை அடைந்திருந்த அவன் ஒரு பெரிய விளையாட்டுச் சாமான் கடைக்குள் நுழைந்து வெள்ளைச் சலவைக் கல்லால் செய்யப்பட்டிருந்த ஒரு தாஜ்மகாலை வாங்கிக் கொண்டான். பிறகு பக்கத்திலிருந்த ஒரு பழக் கடையில் போய் கூடைநிறையப் பழங்களையும் வாங்கிக் கொண்டு வீட்டை நோக்கி நடந்தான்.

**ம**றுநாள் காலை ஏழு மணிக்கு அவன் மதுரையில் லலிதாவின் வீட்டுக்குள் நுழைந்து கொண்டிருந்தான்.

விசாலமான வீடு. அகலமான கூடத்தில் ஒரு ஓரத்தில் தொட்டிலில் இரண்டு வயதுச் சிறுவன் தூங்கிக்கொண்டிருந்தான். லலிதாவின் மகனாகத்தான் இருக்க வேண்டும். சுற்றும் ஒரு முறை பார்வையை ஓட்டுவதற்குள் சமையல் அறையிலிருந்து கூடத்தில் வந்த லலிதா, "யார், அண்ணாவா? செருப்புச் சத்தம் கூட மெதுவாய்த்தான் கேட்டது. முன்பெல்லாம் உங்கள் செருப்புச் சத்தம் பங்களா காம்பவுண்டில் நுழையும்போதே சமையல் அறையில் கேட்குமே!" என்று எடுத்ததுமே பழைய ஞாபகங்களைக் கிளறி விட்டாள்.

பரசுராமன் அதற்குப் பதில் சொல்லாமல் மேஜை முன் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டே, "உன் கடிதம் கிடைத்தது. இனிமையாக 'அண்ணா'வை அழைத்திருந்தாய். 'நிஜமாய் வந்தால் நீ எப்படி உபசரிப்பாய்?' என்று உன்னை அளக்க வந்திருக்கிறேன்" என்றதும் லலிதா சிரித்துக் கொண்டே, "என்ஜினீயருக்குச் சதா அளக்கிற ஞாபகம்தானே இருக்க முடியும்? ஆனால் ஒரு விஷயம் நீங்கள் நிறையப் படித்தவர்களாயிற்றே, பெண் மனத்தின் ஆழத்தை அளக்கவே முடியாது என்று தெரியாதா?" என்று பதிலளித்தாள். லலிதா எதற்காக அப்படிச் சொன்னாள் என்று ஊகிக்க முடியாமல் சில கணம் திகைத்திருந்தான் பரசுராமன். விஷயத்தை மாற்றுவதற்காக, தான் வாங்கிவந்திருந்த தாஜ்மகால் பொம்மையை எடுத்து மேஜைமேல் வைத்து, "இதை உன் குழந்தை எழுந்ததும் விளையாடக் கொடு. இந்தா, இந்தப் பழக் கூடையையும் எடுத்து உள்ளேவை" என்றான். சில நிமிஷ நேரம் லலிதா அந்தத் தாஜ்மகாலை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தாள். பிறகு, "பள்ளிக்கூடப் பாட புஸ்தகத்தில் வரும் 'அன்பின் சமாதி' என்ற ஒரு பாடத்தில் இதைப் பற்றி நான் படித்திருப்பதாக ஞாபகம். இதை ஆக்ராவுக்கே போய்ப் பார்க்கவேணும் என்று கூட நான் சிறு வயதில் எண்ணியதுண்டு ஆனால் கற்பனை செய்வதெல்லாம் காரியத்தில் நடந்து விட்டால்தான் தேவலையே! சரி, பேச்செல்லாம் அப்புறமாக வைத்துக் கொள்வோம். நீங்கள் போய்ப் பல் தேய்த்து

விட்டு வாருங்கள். இவர் காலை ஐந்தரை மணிக்கே காப்பி குடித்து விடுவதால் இப்போ காப்பி போட்டுத்தான் தரவேணும்'' என்று கூறிக் கொண்டே ஒரு கையில் பழக் கூடையுடனும் மற்றொரு கையில் அந்தத் தாஜ்மகலுடனும் உள்ளே சென்றாள். அவள் வலது காலை சற்றுச் சாய்த்து நடப்பதைப் பரசுராமன் கவனித்தான். பத்து வருஷங்களுக்குமுன் ஓரேயடியாக நொண்டியா யிருந்தவளுக்குக் கால் இவ்வளவு தூரம் சரியாகி விட்டதே என்று ஆச்சரியப்பட்டான். அவளுடைய களை பொருந்திய முகத்தையும் தன் தனிமை சூழ்ந்த வாழ்வையும் நினைத்ததும், 'நீ ஏமாந்து போனாய்!'' என்று அவன் மனச்சாட்சி அவனைக் குத்திக் காட்டியது. லலிதா சற்று முன் சொன்ன, 'கற்பனை செய்வதெல்லாம் நடந்து விடுகிறதா?' என்ற வாக்கியம் அவன் மனத்தில் பல ஞாபகங்களைக் கிளறிவிட்டது. பல் துலக்கக் கையில் எடுத்த 'பிரஷ்'டன் அப்படியே நாற்காலியில் சூழ் நிலையையும் தன்னையும் மறந்து உட்கார்ந்து விட்டான்.

* * *

பரசுராமனுடைய தகப்பனார் திருச்சியில் ஒரு பிரபல வியாபாரி. பரசுராமன் பெற்றோருக்கு ஒரே மகன். அவன் மிகவும் ஒழுங்கானவன் என்று பெயர் வாங்க வேண்டும் என்பதற்காக அவன் பெற்றோர்கள் வெகு கண்டிப்பாக இருப்பார்கள். அற்பமான தவறுகளுக்கெல்லாம் கூடத் தண்டனை பெரிதாயிருக்கும். பரசுராமன் ஆரம்பத்தில் அடிக்குப் பயந்தான். ஆனால் நாட்கள் செல்லச் செல்ல அந்தப் பயமும் போய் விட்டது. வாங்கும் அடியை மறு நிமிஷமே மறந்துவிடுவான்.



பரசுராமனுடைய தகப்பனார் தன் தலைமை குமாஸ்தாவுக்கு வசிக்கத் தன் பங்களாவின் காம்பவுண்டிலேயே சிறு விடுதி கட்டிக் கொடுத்திருந்தார். பரசுராமனுக்கு எட்டு, ஒன்பது வயதா யிருக்கும்பொழுதுதான் குமாஸ்தா தம் குடும்பத்துடன் அந்த விடுதிக்கு வந்தார். குமாஸ்தாவின் மகள்தான் லலிதா. நினைத்துப் பார்த்தால், கருப்புப் புள்ளி போட்ட சிவப்புப் பாவாடை யுடுத்தி அதே சீட்டி ஜாக்கெட்டுடன் இடுப்பில் இரண்டு வயதுத் தம்பியைத் தூக்கிக் கொண்டு பரசுராமன் வீட்டுச் சமையலறையில் அவன் தாயார் கொடுக்கும் பக்ஷணங்களை வாங்கிக் கொள்ளக் கை நீட்டும் லலிதாதான் பரசுராமன் ஞாபகத்துக்கு இப்போதும் வருகிறாள். லலிதா சிரிக்கும் போது அவள் கன்னம் குழியும். அப்பொழுது பரசுராமனுடைய தாயார் அவளிடம், ''நீ பரம அதிர்ஷ்டசாலியா யிருப்பாய்'' என்று குறி சொல்வதுண்டு. லலிதா இல்லாத ஒரு சமயம் பரசுராமனிடம் அவன் தாயார் ''அந்தப் பெண் தாயாருக்கு எவ்வளவு உதவியா யிருக்கிறாள், தெரியுமா? பள்ளிக்கூடமும் போகிறாள். ஓய்விருந்தால் எனக்கும் ஒத்தாசை செய்கிறாள். நீயும் இருக்கிறாயே! அவன் குழந்தை, நீ கோட்டான்'' என்றாள். அந்த நிமிஷம் முதல் லலிதாவைப் பரசுராமன் தன் விரோதி என்று நிச்சயித்து விட்டான். ஆனால் இதை யொன்றும் லலிதா அறியவில்லை.

காலையில் பரசுராமன் தகப்பனாருடன் சாப்பிடுவது வழக்கம். அவர்களுடைய தட்டை அலம்பிக் கொண்டு வைப்பது, டம்ளரில் தண்ணீர் கொண்டு வைப்பது, ஏதாவது பரிமாறுவது இப்படி லலிதா பரசுராமனுடைய தாயாருக்கு உதவி செய்வது வழக்கம். அவள் கறி குழம்பு ஏதாவது பரிமாறி விட்டு, ''போதுமா, அண்ணா?'' என்று பரசுராமனிடம் கேட்டால் அவன் பதில் சொல்வான். ஆனால் தாயார் 'கோட்டான்' என்று பரசுராமனைச் சொன்ன மறு நாள் காலை ஊறுகாய் பரிமாறிவிட்டு லலிதா 'போதுமா?' என்று கேட்டதற்கு, ''என் மிச்சம் பிடித்து உன் வீட்டுக்குக் கொண்டு போகணுமோ?'' என்று தன் ஆத்திரத்தைக் கொட்டினான். மறு கணம் பரசுராமன் முதுகில் அவன் தகப்பனார் 'பளார்' என்று ஒரு அறை வைத்தார். பரசுராமன் அப்படியே சாதத் தட்டின் முன்னாலிருந்து எழுந்து போய்க் கை அலம்பி விட்டுப் பள்ளிக்கூடம் சென்றான்.

அன்று மத்தியானம் பள்ளிக்கூடம் விட்டபின் பெஞ்சியில் உட்கார்ந்திருந்த பரசுராமன் வயிற்றில் பசி கிள்ளிக்

கொண்டிருந்தது. 'வீட்டுக்குப் போய்ச் சாப்பிட்டு விட்டு வரலாமா?' என்று யோசித்தான். ஆனால் மறு நிமிஷம் வீம்புடன் 'போகக் கூடாது' என்று எண்ணிக்கொண்டான். இப்படியே மனம் தடுமாறிக் கொண்டிருந்த போது அவன் சற்றும் எதிர்பாராத ஒரு நிகழ்ச்சி நடந்தது. அவன் படித்து வந்த முனிசிபல் ஆரம்பப் பள்ளியை அடுத்த கட்டிடத்தில்தான் பெண்களுக்கான ஆரம்பப் பள்ளி இருந்தது. அதில் லலிதா படித்து வந்தாள். அவள் இரண்டு இலைகளையும் தன் 'டிபன் செட்'டையும் எடுத்துக் கொண்டு பரசுராமன் முன் வந்து, "அண்ணா, நீ மத்தியானம் சாப்பிட எடுத்து வரவில்லையே! பாவம், உன் அம்மா என் டிபன் செட்டில் நிறையப் போட்டுக் கொடுத்து இரண்டு இலையும் கொடுத்திருக்கிறாள். இலையில் பாதிச் சாதம் போடுகிறேன். சாப்பிடு!" என்று கூறி அவன் அருகில் பெஞ்சியில் உட்கார்ந்துகொண்டு, 'டிபன் செட்'டைத் திறந்தாள்.



தாயார் கொடுத்தனுப்பிய சாதத்தைச் சாப்பிடாமல் கோபத்தைக் காட்டலாம் என்றால் வயிற்றுப் பசி குறுக்கே நின்றது. திருப்தியாகச் சாப்பிட்டான். கோபமெல்லாம் எங்கோ போய்விட்டது. பிறகு சிரித்துக் கொண்டு லலிதாவைப் பார்த்து, 'அன்ன தாதா சுகீ பவ' என்றான். லலிதா அர்த்தம் விளங்காமல், "அப்படியென்றால்?" என்று கேட்டதும் அவன், 'சாப்பாடு கொடுத்தவர் நன்றாயிருக்கட்டும்' என்று பொருள். எங்கள் வகுப்பு வாத்தியாருக்கு மத்தியானம் யாராவது ஒரு மாணவன் டிபன் கொண்டு வருவது வழக்கம். அவனை வாத்தியார் இப்படி ஆசீர்வதிப்பார்" என்று விளக்கினான். லலிதா பெஞ்சியில் சிந்தியிருந்த சாதப் பருக்கைகளை டிபன் செட்டில் பொறுக்கிப் போட்டுக்கொண்டே, "ஆனால் நீ என் வாத்தியாரல்லவே!" என்று கூறி விட்டுச் சென்று விட்டாள்.

அன்று மாலை விளையாட்டு முடிந்து அவன் வீட்டுக்குப் போனதும் அவன் தாயார், "கைகால் அலம்பிவிட்டு வா. மத்தியானமே சாப்பிடவில்லையே! பசிக்குமே, ராமு!" என்றாள். பரசுராமன் ஆச்சரியத்துடன், "லலிதாவிடம் நீ சாப்பாடு கொடுத்தனுப்பவில்லையா? நான் சாப்பிட்டேனே?" என்றதும் அவன் தாயாரின் கண்களில் நீர் நிறைந்து விட்டது. அவள் உடனே லலிதாவைக் கூப்பிட்டு, "நீ இவனுக்குச் சாதம் கொண்டு போனாயா, லலிதா?" என்று கேட்டதும் "ஆமாம், மாமி! காலையிலேயே என்னால் அடிபட்டான். சாப்பிடவில்லை. மத்தியானமும் பட்டினியாயிருக்கக் கூடாதே என்றுதான் அப்படிச் செய்தேன். உங்களிடம் கேட்கப் பயமாயிருந்தது" என்றாள்.

உடனே பரசுராமனின் தாயார், "பார்த்தாயா, ராமு! லலிதா எவ்வளவு சமர்த்து! இவள் அருமை உனக்கு எங்கே தெரியப் போகிறது?" என்றாள். அம்மா சொன்னது எவ்வளவு உண்மை எனபதை அவன் அறிந்திருந்தால் இன்று அவன் இப்படி விருந்தினனாக இந்த வீட்டுக்கு வந்திருப்பானா? லலிதாவின் அண்ணாவாகத்தான் இருந்திருப்பானா? ஆனால் அன்று தன் தாயார் லலிதாவை இப்படித் தூக்கி வைத்துப் பேசுகிறாளே என்ற பொறாமைதான் அவனுக்கு ஏற்பட்டது.

பரசுராமனுக்குச் சிறு வயது முதலே தோட்ட வேலையில் ஆர்வமுண்டு. வீட்டைச் சுற்றியுள்ள தோட்டத்தின் ஒரு மூலை அவன் சேஷ்டைகளுக்காக ஒதுக்கி விடப்பட்டிருந்தது. அங்கே காலையில் ஒரு கிளையை நட்டு விட்டோ, விதையை விதைத்து விட்டோ, சாயங்காலம் வேர் வந்ததா அல்லது முளை வந்ததா என்று ஆராய்வான். ஆனால் நான்காம் வகுப்பில் படிக்க வந்ததும் அப்படிச் செய்யலாகாது என்று புத்தகத்தில் படித்தான். பிறகு அவன் நட்ட பல செடிகள் பிழைத்தன.

பரசுராமனுக்குப் பதினொரு வயதிருக்கும். அப்போது, அவன் ஒரு முறை மிகவும் சிரமப்பட்டு எங்கிருந்தோ ஒரு வேப்பஞ் செடி கொண்டு வந்தான். அதை நட்டு விட்டு அதற்கு நீர் போகும்படி பாத்தி வெட்டினான். பக்கத்தில் தம்பியுடன் வேடிக்கை பார்த்துக்கொண்டு நின்றிருந்த லலிதாவிடம், "ஒரு குடம்

தண்ணீர் எடுத்து வா!'' என்று கட்டளை யிட்டான். லலிதா தண்ணீர் எடுத்து வரச் சென்றாள். கலைக் கொத்தைக் கொண்டுவைக்க பரசுராமன் சென்றான். திரும்பி அவன் வந்து பார்த்தபோது லலிதாவின் தம்பி கருவேப்பஞ் செடியைப் பிடுங்கி அதன் நுனியைத் தரையில் நட முயன்று கொண்டிருந்ததைப் பார்த்தான். பரசுராமனுக்குத் தாங்க முடியாத ஆத்திரம் வந்துவிட்டது. இதற்கிடையே லலிதா தோட்டக்காரனுடைய மண் குடத்தில் தூக்க முடியாமல் தண்ணீர் தூக்கிக் கொண்டு வந்து சேர்ந்தாள். அந்தக் குடத்தை அப்படியே வாங்கி வீசி எறிந்தான் பரசுராமன். மறுகணம் லலிதாவின் தம்பி 'வீல்' என்று ஒரு கூச்சலுடன் அழத் தொடங்கி விட்டான். குடம் உடைந்து அதன் தண்ணீரும் மண்ணும் கலந்து லலிதாவின் தம்பி கண்ணில் விழுந்து விட்டது. அந்த அழுகையைக் கேட்டுக் கொண்டு அங்கே வந்த பரசுராமனின் தாயார் "ஏண்டா, குழந்தையை என்ன செய்தாய்?" என்று கையை ஓங்கி அடிக்கப் போனாள். ஆனால் 'லலிதா, "அண்ணா ஒன்றும் செய்யவில்லை மாமி! குடம் என் இடுப்பிலிருந்து நழுவி விழுந்துவிட்டது. தண்ணீரும் மண்ணும் கலந்து அம்பியின் கண்ணில் விழுந்ததால் அழுகிறான்!" என்றாள்.

பரசுராமன் திகைத்துப் போனான். அவன் தாயார் அங்கிருந்து போனபின், "இருந்தாலும் இவ்வளவு கோபம் ஆகாது, அண்ணா!" என்று கூறிச் சிரித்தாள் லலிதா. அந்த வார்த்தையில் புதுச் சக்தி இருப்பதாகத் தோன்றியது பரசுராமனுக்கு. அவன் யாரிடமும் கோபித்துக் கொள்ளலாகாது என்று நிச்சயித்தான். அதுமுதல் அப்படியே கோபம் வந்தாலும் எழுந்து கொஞ்ச தூரம் உலாவிவிட்டுக் கோபத்தை விரட்டிய பின்பே வருவான்.

* * *

காலம் வேகமாய்ச் சென்றது. சிறுவனாயிருந்த பரசுராமன் கல்லூரியில் இண்டர் தேறி என்ஜினீயரிங் கல்லூரியிலும் புகுந்துவிட்டான். மொட்டு மலர்வதுபோல் லலிதாவின் அழகும் யௌவனமும் மலர்ந்தன. அவள் முன்போல் அவனை "அண்ணா!" என்று அழைப்பதில்லை. அவன் முன் வருவதுகூட இல்லை. தப்பித் தவறி எதிர்ப்பட்டாலும் குனிந்த தலையுடன் நாணிக்கொண்டு சென்று விடுவாள். காரணம் என்ன? லலிதாவுக்கும் அவனுக்கும் விவாகம் நடக்க வேண்டும் என்று அவனுடைய தாயார் நிச்சயித்தது தான்! அவனுக்கும் அதில் சம்மதமே. ஆனால் விதி வகுத்திருந்த திட்டம் வேறு.

அவன் எவ்வளவோ ஆசையுடனும் நம்பிக்கையுடனும் தான் கல்லூரியில் சேர்ந்தான். என்ஜினீயரிங் கல்லூரியில் மூன்றாம் வருஷம் படித்துக் கொண்டிருந்தான். அந்த வருஷம் அவன் கலியாணம் நடப்பதாக ஏற்பாடு. தீபாவளிக்கு இரண்டு நாள் முன் அவன் வீட்டுக்கு வந்தான். கல்லூரி ஹாஸ்டலில் அவன் நண்பர்கள் சிலர் சதா ஊதுவத்தி கொளுத்தி வைத்துக் கொண்டிருப்பதுண்டு. அந்தப் பழக்கம் பரசுராமனுக்கும் ஏற்பட்டிருந்தது. தன் வீட்டின் மாடி அறையிலும் ஊதுவத்தி புகைத்துக் கொண்டிருந்தான். அவன் மேஜை விளிம்பில் நான்கு ஊதுவத்திகளைக் கொளுத்தி வைத்து விட்டு மாலையில் வெளியே சென்றிருந்தான். அந்த வத்திகளில் ஒன்று சற்றுச் சிறிதானவுடன் கீழே விழுந்து விட்டது. மேஜைக்கடியில் ஒரு "டிரே" யில் கொஞ்சம் பட்டாசுக் கட்டுகளும் மத்தாப்புப் பெட்டிகளும் இருந்தன. ஊதுவத்தியிலிருந்து நெருப்புப் பிடித்து அவைகள் வெடித்தன. ஒரு மூலையில் பரசுராமன் தாயார் பொழுதுபோக்குக்காகப் பை செய்யும் உத்தேசத்துடன் வாங்கி வைத்திருந்த பழைய பிலிம் சுருளும் பற்றிக்கொண்டது. தன் வீட்டுத் திண்ணையிலிருந்து லலிதா பரசுராமன் வீட்டு மாடியில் பட்டாசு வெடிக்கும் சத்தம் கேட்டாள். புகை கிளம்புவதைக் கண்டாள். மாடிக்கு ஓடி வந்தாள். அதற்குள் அறையில் கொடியிலிருந்த துணி, சுவரில் ஒட்டியிருந்த வர்ணக் காகிதம் எல்லாம் எரிந்துகொண்டிருந்தன. உள்ளே நுழைந்த லலிதா வெளியே திரும்பி வர முடியாமல் வாசலில் கதவு எரிந்து கொண்டிருந்தது. முன்புறத்து ஜன்னல் வழியாய்க் கீழே குதித்து விட்டாள். மாடி அதிக உயரமாயில்லாததால் கால் மட்டும் ஒடிந்தது. இதெல்லாம் இரவு எட்டு மணிக்கு வீட்டுக்கு வந்த பிறகுதான் பரசுராமனுக்குத் தெரியும்.

இரண்டு நாள் கழித்து அவன் கல்லூரிக்குத் திரும்பிப் போகுமுன் ஆஸ்பத்திரியில் லலிதாவைப் பார்த்தபோது அவள் பல வருஷங்களுக்குப் பிறகு அவனிடம் பேசினாள். "நீங்கள் மாடியில் தூங்கிக்கொண்டிருந்துவிட்டுத் திடீரென்று விழித்துக் கொண்டு வெளியே வர வழி தெரியாமல் திகைக்கிறீர்களோ என்று பார்க்க வந்தேன். நல்ல காலம்! நீங்கள் உள்ளே இல்லை" என்றாள். பரசுராமன் தன்னையுமறியாமல் உள்ளத்தில் உவகை பொங்க, "நீ மனிதப் பிறவிக்கு அப்பாலுள்ளவள், லலிதா!" என்றான்.

ஆனால் மனிதனுக்கு ஸ்திர புத்தி ஏது? பரசுராமன் கிறிஸ்துமஸ் விடு

முறைக்கு வந்தபோது லலிதாவின் வலது கால் நன்றாகத் தளர்ந்து போய் அவள் மிகச் சிரமத்துடன் நடப்பதைக் கவனித்தான், அவனுக்குப் பகீர் என்றது. இவளை அவனால் கலியாணம் செய்து கொள்ள முடியுமா? ஆனால் தன்னால் தானே ஒரு விதத்தில் அவளுக்கு இந்தக் கஷ்டம் வந்தது என்று எண்ணினான். கடைசியில் ஒருநாள் அவன் தன் தாயாரிடம், "அம்மா! லலிதாவைக் கலியாணம் செய்து கொள்ள முடியாது" என்று சொல்லி விட்டான். ஆனால் தாயார் "நாளடைவில் அவள் கால் குணமாகிவிடும் என்கிறார் டாக்டர். அவளை நாம் கைவிடலாகாது" என்றாள்.

"முடியாது, நாளைக்கு அவள் கால் சரியாகா விட்டால் வாழ்நாள் முழுதும் எனக்கு அல்லவா கஷ்டம்?" என்று பரசுராமன் சொன்னதும் தாயார் கோபத்துடன், "அப்பாவிடம் சொல்கிறேன்" என்றாள். அதே சமயம் வீட்டின் உள்ளிருந்து லலிதாவின் குரல், "மாமி, நீங்கள் வீணாக விவாதம் பண்ணிக் கொள்ள வேண்டாம். இனி யார் சொன்னாலும் உங்கள் மகன் என் அண்ணாதான்" என்று கேட்டது. அழுகைக்கிடையே வந்த உறுதி கொண்ட வார்த்தைகள் பரசுராமன் மனதைத் தாக்கின. அவன் அங்கே உட்கார்ந்திருக்க முடியாமல் எழுந்து சென்று விட்டான்.

கோடை விடுமுறைக்கு அவன் வந்த போது குமாஸ்தா இருந்த வீடு காலியாயிருந்தது. அவர் பதினைந்து நாட்களுக்கு முன் சொந்த ஊராகிய சேலத்துக்குப் போய்விட்டார் என்று கேள்விப் பட்டான்.

* * *

அதற்குப் பிறகு பத்து வருஷ காலமாக லலிதாவைப் பற்றி யாதொரு தகவலும் இல்லை. பரசுராமனுடைய தாயார் அவன் என்ஜினீயரிங் படிப்பை முடிப்பதற்குள்ளாகவே இவ்வுலகத்தை விட்டுச் சென்று விட்டாள். பரசுராமன் படிப்பு முடிவுற்றதும் ஜில்லா போர்டில் என்ஜினீயரானான். அவன் ஒவ்வொரு சமயம் விவாகம் செய்து கொண்டு குடும்ப வாழ்வு நடத்தலாமா என்று எண்ணுவதுண்டு. ஆனால் அடுத்த கணமே லலிதாவின் நினைவு வரும். அவள் கதி என்னவோ? இந்த எண்ணம் எழுந்ததும் அவன் கலியாணம், குடும்பம் என்ற யோசனையையே விட்டுவிடுவான்.

இப்பொழுது ஒரு திருப்தி, லலிதாவின் கால் குணமாகிவிட்டது. அவள் சீரும் சிறப்பமாக வாழ்கிறாள். ஒரு குழந்தைக்குத் தாயாராகவும் கூட ஆகிவிட்டாள்.

'அவள் நன்றாயிருக்கட்டும்' என்று மனதார வாழ்த்தினான் பரசுராமன்.

* * *

பின் புறம் செருப்புச் சத்தம் கேட்கவே கண்களைத் திறந்து திரும்பிப் பார்த்துத் திகைத்துப் போனான். மூன்று வருஷங்களுக்கு முன் பரசுராமன் கீழ் மேஸ்திரியாயிருந்து ராஜினாமா செய்த நடராஜன் தான் வந்து கொண்டிருந்தான். அவன் பரசுராமனிடம் புன்முறுவலுடன், "இப்பொழுதுதான் வந்தீர்களா?" என்று கேட்டு விட்டு, "லலிதா, காப்பி சாப்பிட்டு விட்டாரா உன் அண்ணா?" என்று விசாரித்தான். சமையலறையிருந்து வெளியே வந்த லலிதா, "மூன்று தடவை காப்பி எடுத்து வந்தேன். கண்களை மூடிக்கொண்டு தூக்கத்தில் ஆழ்ந்து உட்கார்ந்திருந்தார்!" என்றாள்.

பரசுராமன், "நடேசன், நீங்கள் லலிதாவின் கணவன் என்று தெரியாது. தெரிந்திருந்தால் உங்கள் மனைவி கால் சிகிச்சைக்காக அடிக்கடி லீவு எடுக்கிறீர்கள் என்பதை நம்பியிருப்பேன்!" என்றான்.

அதற்கு நடேசன் சிரித்துக் கொண்டே, "அதனால் என்ன? நீங்கள் கண்டித்தது நல்லதாகி விட்டது. இல்லாவிட்டால் நான் ராஜினாமா செய்திருக்க மாட்டேன். ஒரு கண்டிராக்டர் ஐயாயிரம் ரூபாய் கொடுத்து வியாபாரம் செய்யச் சொன்னார். அவர் கொடுத்த வேளை, நல்ல வேளை. வியாபாரம் நன்கு நடக்கிறது. இரண்டாம் வருஷமே அவருடைய கடனை அடைத்து விட்டேன்" என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது, லலிதா இடையில், "உங்கள் பிரதாபத்தை அண்ணா அப்புறம் கேட்பார். அவர் இன்னும் பல்கூடத் தேய்க்கவில்லை. உங்களுக்குச் சாப்பாட்டுக்கு நேரமாகி விட்டது. அண்ணா பல் தேய்த்து விட்டுச் சாப்பிடட்டும், காப்பி இப்பொழுது குடிக்க வேண்டாம். நீங்கள் வாழைத் தோட்டத்தில் போய் அண்ணாவுக்குச் சாப்பிட ஒரு இலை நறுக்கிக் கொண்டு வாருங்கள்!" என்றாள்.

"ஆகா!" என்று கூறிச் சென்றான் நடேசன். எவ்வளவு அழகான குடும்பம் என்று எண்ணியது பரசுராமனின் மனம். "இவர்களுடைய உள்ளத்தில் அன்பு ஜீவகளையுடன் விளங்குகிறது. ஆனால் உன் மனம் உயிர் நீத்த அன்பின் சமாதி. அப்படியானதற்கு நீதான் காரணம், தெரியுமா?" என்று அவன் மனம் அவனையே குத்திக் காட்டியது.




## 6. சுந்தரியின் அதிர்ஷ்டம்

"சுந்தரி, நீ கவலைப் படாதே! தைரியமாகப் புறப்பட்டுப்போ. வழியில் எந்த ஆபத்து வந்தாலும் நமது குலத்துக்கே தெய்வமாகிய சமுத்திர ராஜனை மனதில் நினைத்துக் கொள். எந்த விபத்தும் நொடியில் நீங்கி விடும்!" என்று கூறிப் பாட்டி சுந்தரியை அனுப்பி வைத்தாள்.

சுந்தரி மிகவும் சந்தோஷத்தோடு புறப்பட்டாள். நீலக்கடலில் சுருண்டு சுருண்டு விழும் அலைகளில், மேலும் கீழும் எழும்பி நீந்திக் கொண்டே வேகமாகப் போனாள்.

அவள் புறம்படும்போது நடுப்பகல் வேளை. சூரியன் உச்சி வானத்துக்கு வந்து முழுப் பொலிவுடன் பிரகாசித்தான். பெரிய மீன்களும் சின்ன மீன்களுமாக எங்கு பார்த்தாலும் சமுத்திரத்தில் துள்ளி விளையாடின. அந்த மீன்கள் மேலே கிளம்பும்போது அவற்றின் மேலே சூரிய ஒளி பட்டு வெள்ளித் துண்டுகள் மாதிரி 'பளீர், பளீர்' என்று பிரகாசித்தன.

சுந்தரி இந்தக் காட்சிகளை யெல்லாம் பார்த்து ஆனந்தப் பட்டுக் கொண்டே போனாள். பாட்டி தந்த மோதிரத்தின் மகிமையினால் அவளுக்கு மனிதர்களைப் போல் நன்றாகப் பேச வந்து விட்டது. சுந்தரி தன்னை மறந்து இனிய குரலில் பாட ஆரம்பித்து விட்டாள். தனக்கு இந்தச் சக்தி வந்ததை நினைக்க நினைக்க அவளுக்கு ஆச்சரியமா யிருந்தது. நீண்ட பிரயாணத்தின் இடையில் கொஞ்சம் கொஞ்சம் ஓய்வு எடுத்துக்கொண்டு பிறகு இரவு பகல் என்று யோசியாமல் நீந்திக் கொண்டே போனாள்.

நான்கு நாட்கள் ஓடி விட்டன. ஐந்தாவது நாள் மத்தியானம் சுந்தரி உற்சாகமாகப் போய்க் கொண்டிருந்த போது தூரத்தில் ஒரு கப்பல் வருவது தெரிந்தது. அதைப் பார்த்துக் கொண்டே சுந்தரி மேலும் போனாள்.

சற்று நேரத்துக் கெல்லாம் கப்பல் சமீபத்தில் வந்து விட்டது. கப்பலைப் பார்க்கும் ஆசையில் சுந்தரி தன்னை மறந்து தலையை மேலே தூக்கியபடி நீந்திக் கொண்டே போனாள்.

கப்பல் மாலுமிகளில் ஒருவன் சுந்தரியைத் தூரதர்சனக் கண்ணாடியின் உதவியைக் கொண்டு பார்த்து விட்டான். அவ்வளவுதான். அவனுக்கு அதிசயம் தாங்கவில்லை.

'ஆகா! புஸ்தகங்களில்தான் கடல் கன்னிகைகளைப் பற்றிப் படித்திருக்

கிரேமே தவிரக் கண்ணால் பார்த்த தில்லை. இவள் கடல் கன்னிகையாகத் தான் இருக்க வேண்டும். இப்படிப் பட்ட சுந்தர உருவமுடைய மானிடப் பெண் நடுக்கடலுக்கு எப்படி வர முடியும்? அப்படியே அவள் கப்பல் விபத்தில் கடலில் விழுந்திருந்தாலும் எப்படி இத்தனை நேரம் உயிரோடு நீந்த முடியும்? எப்படியாவது இவளைப் பிடித்து விட்டால் எந்தப் பொருட்காட்சிச் சாலைக்காவது கொடுத்து விடலாம். நிறையப் பணம் கிடைக்கும்!' என்று எண்ணமிட்ட அவன் தந்திரமாகக் கப்பல் போய்க் கொண்டிருக்கும்போது ஒரு பெரிய வலையை வீசினான்.

கப்பலையே பார்த்துக் கொண்டிருந்த சுந்தரிக்குத் தன்னை மாலுமி ஒருவன் பார்க்கிறான் என்பதே தெரியவில்லை. அவன் தன்னைப் பிடிக்க வலை வீசியதும் அவளுக்குத் தெரியவில்லை.

அடுத்தகணம் சுந்தரி வலையில் அகப்பட்டுக் கொண்டு விட்டாள். அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. வலை, அவளை எந்தப் பக்கமும் அசையவிடாமல் சுருக்கிக் கொண்டு விட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் வலையோடு அவள் மேலே தூக்கப் பட்டாள். மாலுமி கப்பல் மேல் தளத்துக்கு வந்து, தீ விபத்துக்காகச் சேகரிக்கப் பட்டிருக்கும் பெரிய தண்ணீர்த் தொட்டியில் சுந்தரியை விட்டு வலையைப் பிரித்து எடுத்துக் கொண்டான். சுந்தரி இதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லையாதலால் சுலபமாக அகப்பட்டுக் கொண்டு விட்டாள்.

அந்த மாலுமிக்கு ஆனந்தம் தாங்கவில்லை. நல்ல வேளையாக இந்தச் சம்பவத்தை வேறு யாரும் பார்க்கவில்லை. ஒரு பெரிய அறை மாதிரி கட்டப் பட்டிருந்த அந்தத் தண்ணீர்த் தேக்கத்தின் கதவைப் பூட்டிக் கொண்டு அவன் சந்தோஷமாகப் போய்த் தன் வேலையைக் கவனிக்கலானான். ஊருக்குப் போன பிறகு தான் இதை வெளிப்படுத்த வேண்டும் என்பது அவனது எண்ணம்.

சுந்தரி தண்ணீர்த் தேக்கத்தில் இப்படியும் அப்படியும் போனாள். பெரிய கடலில் இஷ்டப்படி திரிந்த அவளுக்கு இங்கே யிருக்கப் பிடிக்கவில்லை. மனிதன் கண்ணில் பட்டு அகப்பட்டுக் கொண்டு விட்டதை எண்ணி அவள் ரொம்பவும் பயந்தாள்; மேலும் கீழும் பார்த்தாள். மேலே கடல் நீரைக் குழாய் வழியாக நிரப்புவதற்கு ஜன்னல்மாதிரி கண்ணாடிக் கதவு இருந்தது. அதைத் திறப்பது முடியாத காரியம். ஏனென்றால் உள்புறம் அதற்குத் தாழ்ப்பாள் இல்லை. யாராவது வெளியிலிருந்து உதவி செய்தால் அந்த ஜன்னல் வழியாகக் குதித்து மீண்டும் கடலுக்குப் போய் விடலாம்.

ஆனால் உதவி செய்கிறவர்களைத் தான் காணோம். சுந்தரி, வேறு வழியின்றி, சமுத்திர ராஜனை மனம் உருகிப் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தாள். 'ராஜகுமாரனிடம் வைத்த பிரேமை காரணமாகத்தானே இத்தகைய கஷ்டங்களையெல்லாம் அநுபவிக்க நேர்ந்திருக்கிறது. இந்தச் சிறையிலிருந்து எப்படித் தப்புவது? ஐயோ! நம்மை பிருகக் காட்சிச் சாலைக்கு அல்லவா கொண்டுபோய் வைத்து விடுவான் இந்தப் பாழாய்ப் போன மனிதன்! ஆழ்கடலை ஆளும் சமுத்திர ராஜனே! நீலக் கடலுக்கு அதிபதியே! நீர்தான் இந்த விபத்திலிருந்து தப்ப உதவி புரிய வேண்டும்!' என்று மனம் உருகிக் கண்களில் நீர் மல்க வேண்டிக் கொண்டாள்.

கப்பல் அது பாட்டுக்குப் போய்க் கொண்டே யிருந்தது. இரவு வந்து



ஒருவர்:-"நான் என் புது சைக்கிளில் ஏறிக் கொண்டு டாக்டர் வீட்டுக்குப் போனேன். டாக்டர் என் வயிற்று வலிக்கு இரண்டு மாத்திரைகள் கொடுத்தார். அதை அங்கேயே சாப்பிட்டு விட்டு வாசலுக்கு வந்தேன். அவ்வளவுதான், போய் விட்டது."

"எது? வயிற்று வலியா?"

"இல்லை, சைக்கிள்!"

விட்டது என்பதற்கு அறிகுறியாக எங்கும் இருள் கவிந்து கொண்டது. சுந்தரியின் மனம் தவித்தது. எப்படித் தப்புவது என்று அவனுக்குத் தெரியவே யில்லை.

இந்தச் சமயம் மெதுவாகப் பூட்டுத் திறக்கும் சத்தம் கேட்டது. சுந்தரி தன்னை வலைபோட்டுப்பிடித்த மாலுமி தான் வந்துவிட்டான் என்று நினைத்து நடுங்கினன். ஆனால் என்ன ஆச்சரியம்! சுமார் இருபது வயது மதிக்கக் கூடிய ஒரு அழகிய பெண் கதவைத் திறந்து உள்ளே வந்து அந்த நீர்த் தொட்டியின் கண்ணாடி ஜன்னலுக்கு அருகே கையில் விளக்குடன் பிரமித்த படி நின்ருள். சுந்தரியின் இணையற்ற அழகு அவளை வாய் திறந்து பேசவொட்டாமல் செய்து விட்டது.

சுந்தரிக்கு அந்த நிசி வேளையில் தன்னைப் பார்க்க வந்தது ஒரு இளம் பெண்ணு யிருக்கவே ரொம்பவும் தைரியம் வந்து விட்டது.

"பெண்மணி, பயப்படாதே! நான் ஒரு கடல் கன்னிகை. இந்தக் கப்பல் மாலுமி என்னை எப்படியோ வலை போட்டுப் பிடித்து விட்டான். என்னை எப்படியாவது மீண்டும் கடலுக்கு அனுப்பி வையேன்!" என்று அழகாக, மெதுவாக, மணிக் குரலில் பேசினன்.

அந்தப் பெண் சுந்தரியைப் பார்த்ததுமே பிரமித்து விட்டாள். அவள் மனிதர்களைப் போல் பேசுவதைக் கேட்டதும் பயத்தினல் அவளுக்கு உடம்பெல்லாம் வியர்த்து விட்டது.

"கடல் கன்னிகையே, அந்த மாலுமி என் கணவர்தான். அவர் உன்னைப் பிடித்ததை நான் பார்க்க வில்லை. ஆனல் அவர் இந்தத் தண்ணீர் அறையைச் சர்வ ஜாக்கிரதையாகப் பூட்டிச் சாவியைப் பத்திரமாக இடுப்பில் வைத்துக் கொண்டதைப் பார்த்தேன். அப்பொழுதிலிருந்தே அவர் முகம் நன்ருயில்லை. அவர் தமக்குத் தாமே ஏதேதோ பேசிக் கொண்டார். ஆகவே ஏதோ ரகசியம் இருக்கிறது என்று ஊகித்தேன். அவரை நேரில் கேட்கத் தைரியம் இல்லை. அவர் தூங்கிப் போனதும் மெதுவாகச் சாவியை எடுத்து வந்து திறந்ததும் உன்னைப் பார்த்தேன். உன்னைத் தப்புவிக்கிறேன், பயப்படாதே!" என்று மெல்லிய குரலில் சொல்லி மெதுவாக வெளியே வந்து தண்ணீர் அறையின் பின் பக்கத்தில் கடற்புரமாக நீர் நிரப்புவதற்கு வைக்கப்படிருந்த கண்ணாடிக் கதவை ஓசைப்படாமல் திறந்தாள். உடனே சுந்தரி அவளுக்கு நன்றி தெரிவித்து விட்டு ஒரு எழும்பு எழும்பி ஜன்னல் வழியாகச் சமுத்திரத்தில் 'தொபுகடீர்' என்று குதித்தாள்.

சமுத்திரத்தில் விழுந்தவுடன் அவளுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. அவள் இந்த இக்கட்டிலிருந்து தப்புவோம் என்று நினைக்கவே யில்லை. சமுத்திர ராஜனைத் தியானம் செய்து கொண்டே மேலும் போனுள்.

அந்த மலையை அடைந்ததும்தான் அவள் மனசுக்கு நிம்மதி ஏற்பட்டது. பிறகு முனிவரைக் காண வேண்டுமே என்னும் கவலையோடு கரைப் புறமாகவே கடலில் அலைந்து கொண்டிருந்தாள். அந்த மலையில் நீண்ட பசுமையான மரங்கள் நிறைந்திருந்தன. மனிதர்கள் யாரேனும் இருந்து அவர்கள் கண்ணில் பட்டுவிடக் கூடாதே என்று சுந்தரி நடுங்கினள். ஆனல் அந்த மலையில் மனித நடமாட்டமே இருப்பதாகத் தெரியவில்லை.

சூரியன் உதயமாகும் தருணமாயிருந்தது. பறவைகள் கலகல வென்று தங்கள் பாஷையில் பேசிக்கொண்டன.

சுந்தரி தயாராக முனிவரின் வருகையை எதிர்பார்த்துக் கரையோரமாகக் காத்திருந்தாள்.

சற்று நேரத்துக்கெல்லாம் நீண்ட தாடியுடனும் கையில் கமண்டலத்துடனும் முனிவர் வந்தார். ஆகா! அவர் முகத்தில் எப்பேர்ப்பட்ட ஒளி வீசியது! சுந்தரிக்கு அவரைக் கண்டதும் தன்னையறியாமலேயே அவரிடம் ஒரு பக்தி உண்டாயிற்று.

'பாட்டி சொன்னது சரிதான். இவர் ஒரு பெரிய மகான் என்பது இவருடைய பார்வையி லிருந்தே நன்ருய்த் தெரிகிறது. என் மனசில் இடைவிடாமல் தோன்றி என்னைத் தன்னிடம் அழைக்கும் ராஜகுமாரனை நான் அடைய இவர் நிச்சயம் வரம் தருவார்!' என்று தனக்குள்ளே நினைத்துக் கொண்டாள் சுந்தரி.

அவர் மேட்டிலிருந்து இறங்கி, சமுத்திர ஜலத்தின் ஓரமாக உலாவ ஆரம்

பித்ததும் சுந்தரி, கம்பீரமான குரலில் "ஸ்வாமி, ஏழையைக் காப்பாற்ற வேண்டும், காப்பாற்ற வேண்டும்!" என்று கல்லும் கனிந்து உருகும்படி பரிதாபமான குரலில் கதறினள்.

முனிவரின் மனம் அந்தப் பெண்ணின் பரிதாபக் குரல் கேட்டதும் இரங்கியது. அவர் சமுத்திரத்தில் ஒரு பெண் தவறி விழுந்து பரிதவிப்பதாகவே நினைத்தார்.

"பெண்ணே, பயப்படாதே! இதோ உன்னைக் காப்பாற்றுகிறேன்" என்று சொல்லிக் கையைத் தூக்கிக் கடலைப் பார்த்து "நில்" என்று மிரட்டினர். என்ன ஆச்சரியம்! சமுத்திரத்தில் அலை நின்று போய் விட்டது. முழங்கால் ஆழத்துக்குத்தான் ஜலம் இருந்தது. மெதுவாகச் சுந்தரி நகர்ந்து கரையை அடைந்தாள். முனிவர் கையைத் தொங்க விட்டதும் கடல் அலைகள் முன் போல் 'சோ' என்ற ஒலியுடன் வீச ஆரம்பித்து விட்டன.

"ஸ்வாமி, என் மனோரதம் பூர்த்தியடைய வேண்டும் என்று தாங்கள் ஆசீர்வதிக்க வேண்டும்!" என்றாள் சுந்தரி சமுத்திரத்தில் இருந்தபடியே.

"பெண்ணே, எழுந்து வா! உன் மனோரதம் என்னவென்று சொல்!" என்றார் முனிவர்.

சுந்தரி கரையை நெருங்கினள். அவள் கடல் கன்னி என்பது முனிவருக்குத் தெரிந்து விட்டது. தமது கமண்டலத்திலிருந்து ஜலத்தையெடுத்து அவள் மீது தெளித்தார்.

ஆகா! என்ன ஆச்சரியம்! சுந்தரி சமுத்திரத்திலிருந்து எழுந்து அழகாக நடந்து வந்தாள். மானிடப் பெண்ணாக மாறிவிட்ட தன்னையே பார்க்க சுந்தரிக்கு ஒரே ஆச்சரியமாயிருந்தது. அவள் இப்போது அழகு வடிவமான ஒரு ராஜ குமாரியைப் போல் இருந்தாள். அவளுடைய அழகிய உடலை அலங்கரித்த கண்ணைப் பறிக்கும் நகைகளும் வர்ணப் பட்டாடையும் அவளையே மயங்க வைத்தன.

நன்றி உணர்ச்சியினுல் கண்களில் நீர் பெருக முனிவருக்கு நமஸ்காரம் செய்தாள் சுந்தரி.

"ஸ்வாமி, கடல் கன்னிகையாகிய நான் என் மனதில் ஒரு ராஜகுமாரனைக் கணவனுக வரித்து விட்டேன். எனது இழிவான ஜன்மத்தைப் போக்கி என்னை அழகிய பெண்ணுக்கி விட்டீர்கள். தங்கள் அருளால் அந்த ராஜகுமாரனை நான் அடைய வேண்டும். கருணை புரிய வேண்டும்!" என்று கூறி மீண்டும் பக்தியோடு முனிவரை வணங்கினள்.

"பெண்ணே, முன்பு ராஜகுமாரனைக் கரை சேர்த்த அதே தீவுக்கு மீண்டும் போ! அவனை அடைவாய்!" என்றார் முனிவர்.

உடனே சுந்தரி, "ஸ்வாமி, எனக்கு மனிதர்களைப் போல உருவம் தந்து விட்டீர்கள். அவர்களைப் போலவே எனக்கு ஜலத்தைப் பார்க்கவே இப்போது பயமாயிருக்கிறது!" என்றாள்.

"இதோ உனக்குப் பழைய உருவம் தந்தேன். அந்தத் தீவுக்கு அருகே சென்றதும் என்னை நினைத்துக்கொண்டால் மனித உருவம் மீண்டும் வந்து விடும்" என்று கூறி விட்டு முனிவர் போய் விட்டார்.

சுந்தரிக்கு ஆனந்தம் தாங்கவில்லை. மீண்டும் பழைய உருவம் பெற்றுச் சமுத்திரத்தில் நீந்த ஆரம்பித்தாள். அவளுக்கு எல்லாம் கனவில் நடப்பது போல் இருந்தது. **(தொடரும்)**



# தியாகச் சின்னம்

கே. ஏ. எஸ்.

ராமபுரம் ஹைஸ்கூலில் எனக்கு வேலை கிடைத்த பொழுது நான் ஆனந்தத்தால் துள்ளிக் குதிக்கவில்லை. 'வேலை கிடைத்து விட்டது' என்ற சந்தோஷத்துக்கு மேல் மதராஸைப் பிரிய வேண்டுமே என்ற வருத்தம் தான் உள்ளத்தில் நிரம்பிக் கிடந்தது. அந்த ஊரைப் பற்றிக் கேள்விப்பட்ட ஒன்றிரண்டு பெயர்களை விசாரித்ததில் 'நல்ல ஆரோக்கிய ஸ்தலம். கொஞ்ச நாட்களில் அதைப் பிரிவதற்கே இஷ்டப்படமாட்டீர்கள்' என்று உற்சாகப்படுத்தினார்கள்.

கொஞ்ச காலத்துக்கு—அதாவது சங்கர ஸ்வாமி சத்திர நிர்வாகி கிருஷ்ணஸ்வாமி என் நண்பராகும் வரை—பொழுது போவது சிரமமாகத்தான் இருந்தது. அவர் சிநேகம் கிடைத்த பின் நிலைமை அடியோடு மாறிவிட்டது.

ஒரு சமயம் ராமபுரம் மிராசுதார் சுப்பையர் வீட்டில் சில வெள்ளிப் பாத்திரங்கள் களவு போய்விட்டன. வெள்ளிப் பாத்திரங்கள் களவு போன மறுதினம் மாலை நானும் கிருஷ்ணஸ்வாமியும் வழக்கம் போல் ஆற்று மணலில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தோம்.

"பாவம்! சுப்பையருக்குக் கஷ்ட காலம் ஆரம்பித்து விட்டதுபோலிருக்கிறது" என்றார் கிருஷ்ணஸ்வாமி.

"ஏன், அவர்தான் பெரிய பணக்காரராயிற்றே! இந்தச் சில்லறைத் திருட்டினால் அவர் பணம் குறைந்து ஓட்டாண்டியாக ஆகிவிடுவாரா!" என்றேன்.

"அதில்லை; நீங்கள் வருவதற்குக் கொஞ்ச நாட்களுக்கு முன்னால்தான் அவர் மூத்த பிள்ளை இறந்து போனான். இப்பொழுது வெள்ளிப் பாத்திரங்கள் போய்விட்டன."

"இந்த ஊரில் அடிக்கடி ஏதாவது இப்படி நடக்குமோ!" என்று அவரிடம் கேட்டேன்.

"இல்லை, இல்லை. ரொம்ப அபூர்வம்தான். அதிலும் சாமிக்கண்ணு பிடிபட்ட பிறகு அவ்வளவாக யாரும் சாமான்களைப் பறி கொடுத்ததில்லை.—ஆமாம், இந்தச் சங்கர ஸ்வாமி சத்திரம் யாரால் எதற்காகக் கட்டப் பட்டது தெரியுமா!" என்று புதிர் போட்டார் கிருஷ்ணஸ்வாமி.

"யாராவது ஒரு தர்மாத்மாவால் பிரயாணிகள் தங்குவதற்காகக் கட்டப்பட்டிருக்கும்" என்று பதில் அளித்தேன்.

"இல்லை. உங்கள் ஊகம் தவறு. நான் சொல்வதைக் கவனமாகக் கேளுங்கள். இல்லாவிட்டால் உங்களுக்குச் சத்திரத்தின் சரித்திரமே தெரியாமல் போய்விடும்" என்று கூறிவிட்டுக் கதையை ஆரம்பித்தார்.

ராமபுரம் சங்கர சாஸ்திரிகளைப் பற்றி இந்தச் சுற்று வட்டாரத்தில் யாரைக் கேட்டாலும் "அவரா! ரொம்பத் தங்கமானவராச்சே!" என்று தான் சொல்லுவார்கள். அவர் தங்கமானவராக இருந்ததனால் தானே என்னவோ ஈசுவரன் மேன் மேலும் சுவர்ணத் தைக்கொடுத்து அவரைத் துன்புறுத்த விரும்பவில்லை. சாஸ்திரிகள் 'மரம் வைத்தவன் தண்ணீர் விடுவான்' என்ற மனப்பான்மையுடன் வைதிக காரியங்களைக் கவனித்துக் கொண்டு அதன் மூலம் கிடைத்த சொற்ப வரும்படியின் மூலம் அமைதியாகக் காலம் கழித்து வந்தார். இரண்டு பெண்களில் மூத்தவளான விசாலாக்ஷிக்கு, இந்தச் சம்பவம் நடந்த பொழுது மணமாகி யிருந்தது. இளையவளான கமலாவுக்கு விவாகம் ஆகவில்லை. அவளை ஒருவரிடம் ஒப்புவிக்க வேண்டும் என்ற கவலைதான் சாஸ்திரிகளுக்கு. அதற்காகவே கொஞ்சம் கொஞ்சமாகப் பணம் சேமித்து வந்தார்.

இந்த ஊரிலிருந்து குறுக்கு வழியாகப் போனால் கஞ்சம்பாடிக்கு ஆறு மைல்கள். பஸ் பாதையின் மூலம் சென்றால் பத்து மைல்கள். குறுக்கு வழி என்று சொல்கிறேனே ஒழிய, அதன் மூலம் போவதைவிடப் போகாமல் இருந்து விடலாம். வழியெல்லாம் முட்களும் புதர்களும் நிரம்பிக் கிடக்கும்.

சுமார் ஆறு வருஷங்களுக்கு முன்னால், கஞ்சம்பாடி பெரிய பண்ணை விசுவநாதய்யரின் ஏக புத்ரி பங்கஜலக்ஷ்மிக்கு விவாகம் விமரிசையாக நடந்தது. அய்யரின் நிர்ப்பந்தத்தின் பேரில் சங்கர சாஸ்திரிகளே நேரில் இருந்து கல்யாணத்தை நடத்தி வைத்தார். வாஸ்தவத்தில் சாஸ்திரிகளுக்கு அன்று கஞ்சம்பாடிக்குப் போவதில் கொஞ்சமும் விருப்பமில்லை. அவருடைய மூத்த பெண் விசாலாக்ஷி பிரசவிக்கும் சமயம். அவருடைய மைத்துனன் அம்பியும் ஏதோ காரியமாக வெளியூர் போயிருந்தான்.

ஆனால் எல்லோரிடமும் கண்டிப்பாக இருந்து விடமுடியுமா! பெரிய பண்ணை விசுவநாதய்யர் சாஸ்திரிகளிடம் தனி மதிப்பு வைத்திருந்தார். அதுமட்டும் அல்ல; நெடு நாள் பழக்கம் வேறு. சாஸ்திரிகளுடைய உத்தமமான குணமும் அன்பான பேச்சும் அய்யருக்கு நன்றாகத் தெரியும். 'பங்கஜலக்ஷ்மியின் கல்யாணத்துக்கு நீர் வரத்தான் வேண்டும்' என்று அய்யர் பிடிவாதமாகச் சொல்லியிருந்தார். அப்படியிருக்கும் பொழுது அவரிடம் 'முடியாது' என்று நிர்த்தாக்ஷிண்யமாக எப்படிச் சொல்லுவது!

கல்யாணம் தடபுடலாக நடந்தது. அவ்வளவு சந்தடியிலும் சாஸ்திரிகளுக்கு வீட்டு நினைவுதான். ஆனால் அவர் இரவு எவ்வளவுக்கு எவ்வளவு சீக்கிரம் கிளம்ப வேண்டுமென்று எண்ணினாரோ அவ்வளவுக் கவ்வளவு நாழிகையாகி விட்டது.

எவ்வளவு அவசரப்பட்டு என்ன! கடைசி பஸ் எட்டரை மணிக்கு வரும்; ஆனால் அவர் பஸ் ஸ்டாண்டை அடைவதற்குள்ளாக அது கிளம்பிப் போய் விட்டது. ஆகவே, அவர் வேறு வழியின்றி குறுக்குப் பாதையைப் பிடித்தார். பௌர்ணமி நெருங்கிக் கொண்டிருந்தது. இருந்தபொழுதிலும் அன்று வானம் குமுறிக் கொண்டிருந்தது.

அவர் பாதி வழி வருவதற்கு முன்னால் மழை பிடித்துக் கொண்டது. மழையில் அவரால் போக முடியவில்லை யாதலால் நடு வழியிலிருந்த பாழ் மண்டபம் ஒன்றில் புகுந்தார். நனைவதற்கு அஞ்சி மண்டபத்தை அடைக்கலம் புகுந்த சாஸ்திரிகள், தன்மேல் துண்டை இறுகப் பிழிந்தார். நாள் முழுவதும் ஓடி ஆடி வேலைசெய்த களைப்பு. வயதும் ஆகியிருந்தபடியால் அவரையுமறியாமல் 'உஸ், அப்பாடா!' என்ற சொற்கள் அவர் வாயிலிருந்து வெளி வந்தன.

மேலே தொடருவதற்கு முன்னால் பிரபலமாக விளங்கி வந்த சாமிக்கண்ணு என்னும் கொள்ளைக்காரனைப் பற்றியும் இரண்டொரு வார்த்தைகள் சொல்லவேண்டும்.

சாமிக் கண்ணுவின் பெயரைக் கேட்டாலே இந்த ஜில்லாக்காரர்களுக்குச் சிம்ம சொப்பனம். அவன் யார் வீட்டிலும் புகுந்து எதையும் திருடியதில்லை. அவன் ஒரே இடத்திலும் தங்கியதில்லை. இன்று இந்த ஊரில் இருப்பான்; நாளை இருபது மைல்களுக்கு அப்பால் இருப்பான். அவன் வேலை யென்னவென்றால் வழிப்போக்கர்களைக் கொள்ளையடிப்பதுதான். மற்றொரு அதிசயம் என்னவென்றால் இந்த ஜில்லாவுக்கு வெளியேயும் அவன் சென்றதில்லை. பிரபல கொள்ளைக்காரனாகிய சாமிக்கண்ணுவைப் பிடித்துக் கொடுப்பவர்களுக்கு ஆயிரம் ரூபாய் சன்மான மளிப்பதாகச் சர்க்காரே அறிவித்திருந்தார்கள் என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன்!

சங்கர சாஸ்திரிகள் வந்த அன்று அவனும் அந்தப் பாழ் மண்டபத்தில் தங்கியிருந்தான். சாஸ்திரிகள் பெருமூச்சு விட்டுக்கொண்டு 'அப்பாடா!' என்றது அவன் காதில் விழுந்தது தான் தாமதம்; அவன் தன் கனத்த குரலில், "யார் அங்கே!" என்றான்.

சாஸ்திரிகள் நல்ல தைரியசாலிதான். இருந்த பொழுதிலும் வௌவால்கள் வசித்த அந்தப் பாழ் மண்டபத்தில் இந்தக் குரலைக் கேட்டதும் அவருக்கே கொஞ்சம் தூக்கி வாரிப் போடத்தான் செய்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் அவர் முகத்துக்கு நேராக ஒரு வெளிச்சம் தோன்றியது. அந்த வெளிச்சத்தில் தன் முன்னால் நின்ற உருவத்தைக் கண்டதும் அவருக்குத் தேகம் பறந்தது.

"ஏய்! என்ன பதில் பேசமாட்டேன் என்கிறாய்! இந்தச் சாமிக் கண்ணுவிடம் உன் வாலைக் காட்டாதே!" என்று சொல்லிக் கொண்டே அவன் அவர் அருகில் வந்தான்.

அவன் தன்னைத்தானே அறிமுகப்படுத்திக் கொள்ளவே சாஸ்திரிகளுக்கு மின்னல் வேகத்தில் ஒரு யோசனை உதயமாயிற்று. ஒருமுறை ராமபுரத்தில் அவனைப்பற்றிப் பேச்சு வந்த பொழுது, சிலர் அவன் கொள்ளைக்காரனாக இருந்த பொழுதிலும் முருக பக்தி உடையவனென்றும் அவனிடம் தணிந்து போகும் ஜனங்களை அவன் ஒன்றும் செய்வதில்லை யென்றும் கேள்விப்பட்டிருந்தார். சாஸ்திரிகளுக்கு இது ஞாபகம் வரவே அவர், "விசுவநாதய்யர் கொடுத்த பணம் இருக்கிறது. இதுபோல் பணம் சேர்த்துத்தான் என் இரண்டாவது பெண்ணுக்குக் கலியாணம் பண்ணவேண்டும். வேண்டுமானால் எடுத்துக்கொள்!" என்று சொல்லிக்கொண்டே தம் இடுப்பிலிருந்த பையை எடுத்து அவனிடம் நீட்டினார்.

இவ்வளவு நேரமும் தன் கையிலிருந்த 'டார்ச்'சை அமுக்கிக் கொண்டிருந்த சாமிக்கண்ணு தன் விரலை எடுக்கவே, மண்டபம் மறுபடியும் இருள் மயமாகியது. வெளியே பலத்த மழை. நிற்க சக்தியில்லாமல் கீழே உட்கார்ந்த சாஸ்திரிகள் அப்படியே தூங்கியும் விட்டார்.

மறுபடி அவர் கண் விழித்தபொழுது அருணோதயமாகி விட்டது. ஆகாயம் நிர்மலமாக இருந்தது. சாஸ்திரிகள் எழுந்து வேகமாக நடக்க ஆரம்பித்தார். வீட்டு வாசலில் நின்றுகொண்டிருந்த அவர் மனைவி பிரஹதாம்பாள் அவரை மலர்ந்த முகத்துடன் வரவேற்று "உங்களுக்குப் பேரன் பிறந்திருக்கிறான்!" என்ற நற் செய்தியைத் தெரிவித்தாள்.

பதிலுக்கு அவர் "உனக்குக்கூட ஒரு நல்ல செய்தி! நான் பிழைத்ததே புனர்ஜன்மம். நல்லவேளையாக விசுவநாதய்யர் கொடுத்த ரூபாயும் பிழைத்தது!" என்று கூறி நடந்த சம்பவங்கள் அனைத்தையும் விளக்கமாகக் கூறினார். ஒரு நொடியில் விஷயம் ஊர் முழுவதும் பரவிவிட்டது. "ஆகா! சாஸ்திரிகள் நல்ல பாக்கியம் செய்திருக்க வேண்டும். சாமிக்கண்ணுவின் கண்ணில் பட்டபின்பும் பணத்துடன் தப்பி வந்தாரே!" என்று ஜனங்கள் பேசிக் கொண்டனர். வேறு சிலர் சாமிக்கண்ணுவை வாயாரப் புகழ்ந்தார்கள்.

மூன்று நாட்களுக்குப் பிறகு, பகல் போஜனத்தை முடித்துக்கொண்டு கூடத்தில் உட்கார்ந்து சிரம பரிகாரம் செய்து கொண்டிருந்த சங்கர சாஸ்திரிகளின் முன்னால் ஒரு குடியானவன் தோன்றினான். 'இவனை நாம் எங்கேயோ பார்த்திருக்கிறோம் போலிருக்கிறதே!' என்று எண்ணினார் சாஸ்திரிகள்.

அவனோ அவரிடம் ஒரு பையைக் கொடுத்து, "எங்கள் எஜமானர் உங்களிடம் கொடுக்கச் சொன்னார்" என்றான்.

சாஸ்திரிகள் ஒன்றும் விளங்காமல் "உங்கள் எஜமானர் யார் அப்பா! என்னிடம் எதற்கு இதைக் கொடுக்கச் சொன்னார்!" என்று கேட்டார்.

"பையைப் பிரித்துப் பார்த்தால் தெரியும். எனக்கு முதலிலே கொஞ்சம் குடிக்கத் தண்ணீர் இருந்தால் கொடுங்கள்!" என்றான் அந்தக் குடியானவன்.

அப்பொழுது அந்தக் கூடத்தில் அவரையும் அவனையும் தவிர வேறு யாரும் யில்லை. வீட்டின் பின்பக்கம் அவர் மனைவி, அன்றுதான் ஊரிலிருந்து திரும்பிய அம்பி, அவர் இளைய பெண் கமலா மூவரும் பேசிக் கொண்டிருந்தனர். மூத்த பெண் முன் பக்கத்து அறையில் இருந்தாள்.

சாஸ்திரிகள் கமலாவைக் கூப்பிட்டு ஒரு சொம்பில் தண்ணீர் கொண்டு வருமாறு சொன்னார்.

"இதுதான் உங்கள் பெண்ணா, சாமி!" என்று கேட்டான் அவன்.



"ஆமாம் அப்பா! இரண்டாவது பெண்!" என்றார் அவர்.

அவன் தண்ணீரைக் குடித்துவிட்டு சாஸ்திரிகளிடம் விடை பெற்றுக்கொண்டு வேகமாகப் போய்விட்டான்.

நடுங்கும் கரங்களுடன் பையைப் பிரித்துப் பார்த்தார் சாஸ்திரிகள். இதற்குள் அவர் மனைவி மைத்துனன் எல்லோரும் அங்கு வந்து சேர்ந்தனர்.

பைக்குள் கனமான தங்கக் கட்டிகள் மூன்றும் ஒரு துண்டுக் கடிதமும் இருந்தன.

அந்தக் கடிதத்தில் 'ராமபுரம் சங்கர சாஸ்திரிகளின் பெண் கலியாணத்துக்காக சாமிக்கண்ணு அனுப்பிய பரிசு. கடிதத்தைப் படித்த உடனே எரித்துவிடவும்' என்று கண்டிருந்தது.

இந்தச் சம்பவம் நடந்து இரண்டு மாதங்களுக்கெல்லாம் கமலாவுக்குக் கல்யாணம் நடந்தது. பையைக் கொடுத்துவிட்டுப் போன குடியானவனும் கலியாணத்துக்கு வந்திருந்தான். அவனாகவே சாஸ்திரிகளிடம் தான் யாரென்று சொல்லி யிருக்கா விட்டால் அவருக்கு யார் என்று தெரிந்திருக்காது. சாமிக்கண்ணுதான் குடியானவன் வேஷத்தில் வந்திருந்தான். அந்தச் சமயத்தில் அம்பி, பிரஹதாம்பாள், கமலா, விசாலாக்ஷி எல்லோரும் சாமிக்கண்ணுவைப் பார்த்தனர்.

கமலாவின் விவாகம் நடந்தபின் மூன்று மாதங்கள் சென்றன. அவன் ராமபுரத்திலேயேதான் இருந்தாள். அவள் கணவனுக்குப் பம்பாயில் சௌகரியமான வீடு கிடைக்கவில்லை. சாஸ்திரிகளும் கமலாவின் விவாகத்துக்குப் பிறகு சற்று மன நிம்மதி யடைந்தார்.

அவர் சாமிக்கண்ணுவிட மிருந்து தப்பி வந்தது மட்டும் ஊருக்குத் தெரியுமே தவிர, மற்ற விஷயங்கள் ஒன்றும் தெரியாது. கமலாவின் விவாகம் நடந்து மூன்று மாதங்களுக்குள் மூன்று தரம் வந்துவிட்டுப் போய்விட்டான் சாமிக்கண்ணு. சாஸ்திரிகள் மூன்று முறையும் எங்கேயோ வெளியில் போயிருந்தார்.

பொங்கல் பண்டிகையன்று மத்தியானம் கொல்லையில் உள்ள கிரைப்பாத்திகளுக்குத் தண்ணீர் பாய்ச்சிக் கொண்டிருந்த சாஸ்திரிகள், "சாமி!" என்ற குரலைக் கேட்டுத் தலை நிமிர்ந்தார். எதிரே சாமிக்கண்ணு நின்று கொண்டிருந்தான்.

அவருக்குத் 'திக்' கென்றது. மெள்ள சமாளித்துக்கொண்டு, "என்ன சாமிக்கண்ணு! எங்கே இப்படி!" என்று கேட்டார்.

"ஒன்றுமில்லை, சும்மாத்தான் வந்தேன். கமலா சுகமா யிருக்கிறாளா!" என்று கேட்டான் அவன்.

"உம்.........இருக்கிறாள்" என்றார் அவர் மென்று விழுங்கிக்கொண்டே.

"ரொம்ப நாளாக உங்களிடம் ஒரு விஷயம் சொல்லவேணும் என்று எனக்கு ஆசை. இன்றைக்கு எப்படியும் சொல்லத்தான் போகிறேன்!" என்று சாமிக்கண்ணு உறுதியான குரலில் கூறினான்.

அவருக்குப் பிரஹதாம்பாள் அவனைப் பற்றி தன்னிடம் கூறியது நினைவுக்கு வந்தது. 'அப்படியும் இருக்குமோ!' என்ற எண்ணம் அவர் மனத்தை வாட்டியது. அவருடைய அந்தராத்மா மட்டும் 'ஏதோ விபரீதம் இன்னும் கொஞ்ச நேரத்தில் நடக்கப்போகிறது!' என்று சொல்லியது.

கையில் வைத்திருந்த தண்ணீர்க் குடத்தைக் கீழே வைத்து விட்டு, "என்ன சமாசாரம், அப்பா! விளக்கமாகச் சொன்னால்தானே புரியும்!" என்றார் சிரித்துக் கொண்டே.

மேலுக்கு அவர் சிரித்தாரே தவிர, அவர் உள்ளத்தில் வேதனை நிரம்பிக் கிடந்தது. அவர் மனைவி சில தினங்களுக்கு முன்னால் ஒரு பயங்கர சந்தேகத்தைக் கிளப்பிவிட்டிருந்தாள்.

"சாமி! விளக்கமாகத்தான் சொல்லப் போகிறேன். அவசரப்பட்டால் முடியுமா! உங்களை மண்டபத்திலே பார்த்தபிறகு இதோடு ஆறாவது தடவையாக உங்கள் வீட்டுக்கு வந்திருக்கிறேன். காரண மில்லாமலா வருகிறேன்! அதோ அந்த வேப்ப மரத்தடியிலே உட்காரலாம்" என்று கூறிக் கொண்டே முதலில் அவனே வேப்ப மரத்தடிக்குச் சென்று உட்கார்ந்தான்.

அவன் பீடிகை பலமாக இருந்தது. 'அட தெய்வமே! இவன் என்ன வெடி குண்டைத் தூக்கிப் போடப் போகிறானோ!' என்று எண்ணிக் கொண்டே அவன் பின்னாலேயே சென்று அவனுக்கு எதிரில் அவரும் உட்கார்ந்தார்.

இருவரும் கொல்லை வாசற்படியில் நின்று கொண்டிருந்த பிரஹதாம்பாளைக் கவனிக்கவில்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் சந்தடியில்லாமல் அவள் உள்ளே சென்றாள்.

சாமிக்கண்ணு சொல்லத் தொடங்கினான்.

"இன்றைக்கு நான் ஒரு கொள்ளைக்காரனாக இருக்கிறேன். அரசாங்கமும் என்னைப் பிடிக்க முயற்சி செய்து வருகிறது. ஆனால் சுமார் பத்து வருஷங்களுக்கு முன்னால் நான் கொள்ளைக்காரனாகவோ திருடனாகவோ இருக்கவில்லை. இங்கிருந்து முப்பது மைல் தூரத்திலுள்ள கந்தன்பட்டி கிராமத்தில் இருந்த சாமிநாதய்யர் என்ற மிராசுதாரிடம் வேலை செய்து கொண்டிருந்தேன்.

"சாமிநாதய்யர் பெரிய பணக்காரராக இருந்தாலும், ஏழை எளியவர்களுக்கு இரங்குபவர். சில பணக்காரர்களைப் போல் அவர் கல்நெஞ்சக்காரராக இருக்கவில்லை.

அவருடைய தயவில்தான் நான் என் பெண்ஜாதி வீரம்மா, என் மூன்று வயதுப் பெண் செல்வி மூவரும் ஆனந்தமாகக் காலம் கழித்து வந்தோம். எனக்கு இந்த வேலைதான் என்று கிடையாது. கலப்பையைப் பிடித்து உழுவேன். எஜமானனுடைய தோட்டத்திலுள்ள செடிகளுக்கும் மரங்களுக்கும் தண்ணீர் இறைப்பேன். மாடுகளைக் குளிப்பாட்டி தீனி வைப்பேன். கடைக்குப்போய் கறிகாய் வாங்கிக் கொண்டு வருவேன். இதெல்லாம் எஜமானர் மேலிருக்கிற விசுவாசத்தின் மேலே செய்தேனே ஒழிய, கட்டாயப்படுத்தி யாரும் என்னை வேலை வாங்கமாட்டார்கள். என் பெண்ஜாதியும் அய்யர் வீட்டிலேயே வேலை செய்து வந்தாள்.

நான் ரொம்ப அதிர்ஷ்டம் கெட்டவனாக இருந்திருக்க வேண்டும். இல்லாத போனால் திடீரென்று சாமிநாதய்யர் இறந்து போவானேன்! அதிலிருந்து எனக்குக் கஷ்ட காலம் ஆரம்பித்தது. எஜமானன் இறந்து போன உடனே, அவருடைய ஒரே பிள்ளையான ராமமூர்த்தி அந்த ஸ்தானத்துக்கு வந்தான்.

பசு வயிற்றிலே புலி பிறந்தாப் போலே சாமிநாதய்யருக்குப் பிள்ளையாகப் பிறந்தான் ராமமூர்த்தி. அவர் சாகிற மட்டும் பட்டணத்திலே படித்துக் கொண்டிருந்தவன், அப்பா போன உடனே கந்தன் பட்டிக்கு வந்து நிலபுலன்களைக் கவனிக்க ஆரம்பித்தான்.

அவனிடம் வேலை செய்யும் ஒவ்வொருவனும் வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருப்பான். அவன் அப்பா அன்பினாலேயே எல்லோரையும் வேலை வாங்குவார். இவனோ அதட்டி உருட்டி வேலை வாங்குவான். இவனிடம் வேலை செய்ய இஷ்டப்படாமல் அநேகம் பேர் வேலையை விட்டு விட்டுக்கூடப் போயிருக்கிறார்கள். நான் மட்டும் பெரியவர்மேல் இருந்த விசுவாசத்தினால் வேலை செய்து கொண்டிருந்தேன். வேலையை விட்டுவிட்டுப் போயிருந்தால் என் வாழ்க்கையே மாறிப் போயிருக்கும்.

ஒரு சமயம் என் பெண் செல்விக்குக் காய்ச்சல் வந்தது. ஐந்து வயதுப் பெண்ணால் ஜுர வேகத்தைத் தாங்கமுடியவில்லை. கையில் பணமில்லாதபடியால் என் மனைவியை அனுப்பிப் பெரிய அம்மாவிடம் கேட்கச் சொன்னேன்.

"இரும்புப் பெட்டிச் சாவியெல்லாம் ராமமூர்த்தியிடம்தான் இருக்கிறது. அவனிடம் கேட்டு வாங்கிக் கொள்!" என்று அந்த அம்மாள் சொல்லிவிட்டார்களாம்.

சின்ன எஜமானிடம் போய்க் கேட்பதில் பிரயோஜனமில்லையென்று எனக்கு நன்றாகத் தெரிந்த பொழுதிலும், குழந்தையை உத்தேசித்துப் போனேன். வாசல் திண்ணையில் உட்கார்ந்துகொண்டு வெற்றிலை போட்டுக்கொண்டிருந்தார். "குழந்தைக்கு உடம்பு சுகமில்லை. ஐந்து ரூபாய் பணம் கொடுங்கள்!" என்று கேட்டேன்.

"உன் குழந்தைக்கு உடம்பு சரி இல்லையென்றால் அதற்கு நான் ஏன் பணம் கொடுக்க வேண்டுமா! உனக்கு இருக்கும் சம்பளத்துக்குக் குழந்தை எதற்கு! அது போனால் போகட்டுமே!" என்று பதில் வந்தது.

என்னால் அந்த வார்த்தைகளைக் காது கொண்டு கேட்க முடியவில்லை. என் மனத்தில் சுரீரென்று அந்த வார்த்தைகள் தைத்தன. 'இனி இங்கு நிற்பதில் பயனில்லை' என்று குடிசைக்குத் திரும்ப ஆரம்பித்தேன்.

"டேய்! வீட்டுக்குப் போகாதே! மாடுகளைக் குளிப்பாட்ட வேண்டும், தெரிந்ததா!" என்று கட்டளை பிறந்தது.

"ஆகட்டும்!" என்று சொல்லிவிட்டுப் பேசாமல் குடிசைக்கு வந்து விட்டேன்.

அன்றிரவே என் குழந்தை இறந்து போய் விட்டது. அதன் பலனாக இரண்டு தினங்கள் வேலைக்குப் போகவில்லை. அப்பொழுது அறுவடை சமயம். ஆதலால் மூன்றும் நாள் காலையில் வயலுக்குப் போனேன்.

வயலில் நின்று கொண்டிருந்த எஜமானனுக்கு என்னைக் கண்டதும் அளவிலாத கோபம் வந்திருக்க வேண்டும்.

"அயோக்கியப் பயலே! என்ன திமிர் உனக்கு!" என்று கர்ஜித்தார்.

"குழந்தை இறந்து போய்விட்டது!" என்று கூறினேன்.

"அதற்காக! இங்கு வயல் பாழாகப் போகிறதே! உன் குழந்தையுடன் எல்லோரும் போய் விடவேண்டும் என்பது உன் எண்ணமோ!"

என்னால் பொறுக்க முடியவில்லை!

"சரிதான். உங்களுக்கு இஷ்டமில்லாத போனால் நின்று கொள்கிறேன்" என்றேன். அது எஜமானனின் கோபத்தை இன்னும் அதிகமாக்கியது. கையிலிருந்த தடியைக் கொண்டு என்னை அடிக்க ஆரம்பித்தார்.

தூரத்திலிருந்த என் மனைவி, "அடிக்காதீர்கள்!" என்று அலறிக்கொண்டே ஓடி வந்தாள். கண் தெரியாமல் ஓடி வந்த அவள் தரையோடு தரையாக இருந்த அந்தப் பாழும் கிணற்றைக் கவனிக்கவில்லை. அதில் நாலடிக்





குத்தான் தண்ணீர். அதற்குக் கீழே முழுவதும் ஒரே சேறு. அங்கு வேலை செய்து கொண்டிருந்தவர்கள் அவன் அதில் தவறி விழுந்ததும் அவனைக் காப்பாற்ற முயன்றும் பலனில்லாமற் போயிற்று.

"ஒழி நாயே!" என்று கூறிவிட்டு என் எஜமானன் போய்விடவே நான் ஸ்தம்பித்து நின்றேன்.

எனக்கு வந்த ஆத்திரம் கொஞ்ச நஞ்சமல்ல. பழிக்குப் பழி வாங்க என் மனசு துடித்தது. அந்த வேகத்தில் ஒரு கொள்ளைக்காரனுகவே மாறிவிட்டேன்.

இதுவரையில் நான் என் எஜமானன் வீட்டைத் தவிர வேறு எந்த வீட்டிலும் புகுந்து கொள்ளை அடித்ததில்லை.

என் பெண்ணும் மனைவியும் இறந்த பிறகு கர்தன்பட்டியை விட்டுச் சில காலத்திற்கு விலகி யிருந்தேன். ஒரு மாதம் கழித்து, எஜமானனைத் தவிர எல்லோரும் கோவிலுக்குப் போயிருந்த சமயம் பார்த்து எஜமானனுடைய வீட்டுக்குப் போனேன்.

என் வரவு அவனுக்கு ஆச்சரியத்தை யளித்திருக்க வேண்டும். ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டு ஏதோ படித்துக்கொண்டிருந்த அவன் முகமே அதைச் சொல்லிற்று. ஒருமாத காலமாக உள்ளுக்குள்ளேயே குமுறிக் கொண்டிருந்த என் கோபம் வெளியே வரத் தொடங்கிற்று. நல்ல வேளையாக இறந்து போன பழைய எஜமானனின் படம் என் கண்ணில் பட்டது. அவர் எனக்குச் செய்த உதவிகளெல்லாம் என் கண் முன்னே தோன்றவே என் கோபம் ஆறிற்று. நான் அவனை ஒன்றும் செய்யவில்லை. ஆனால் என் மனைவியையும் பெண்ணையும் சாக அடித்ததற்கு நஷ்டஈடாக மூன்று தங்கக் கட்டிகளைக் கத்தியைக் காட்டி மிரட்டி அவனிடமிருந்து வாங்கிக் கொண்டு மௌனமாக வெளியேவந்தேன்.

அன்றைய தினத்திலிருந்து நான் கொள்ளைக்காரனுக மாறவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. என்னல் கர்தன்பட்டியையும் என் குடிசையில் வீரம்மாவுடனும் செல்வியுடனும் நான் நடத்திய இன்ப வாழ்க்கையையும் மறக்கவே முடியவில்லை. ஒரு பத்து நாட்களுக்கு ஒரு முறையாவது கர்தன்பட்டிக்குப் போவேன். தூரத்திலிருந்தபடியே நான் வசித்த குடிசையைப் பார்க்கிறேன். அப்புறம்தான் என் மனம் சற்று நிம்மதி அடைகிறது. இந்த ஒரு காரணத்தால் தான் நான் இந்த ஜில்லாவையே சுற்றிக் கொண்டிருக்கிறேன்.

ஒவ்வொரு முறையும் என் குடிசையைப் பார்க்கும் பொழுது மனம் சந்தோஷமடைந்த போதிலும், அதற்குப்பிற்பாடு ஏற்படும் வேதனை அதிகமாக இருக்கிறது. அதனால் ஒரேயடியாக அதைப் பார்க்கவே கூடாது. மறந்துவிட வேண்டும் என்று நிர்மானித்து விட்டேன்.

ஏதோ ஒரு வேகத்தில் கொள்ளைக்காரனுனேனே தவிர இந்தத் தொழில் எனக்கு இஷ்டமானதல்ல.

அன்று மண்டபத்தில் 'டார்ச்' வெளிச்சத்தில் உங்களைப் பார்த்தவுடனேயே எனக்கு சாமிநாதய்யருடைய ஞாபகம் வந்தது. அவர் பேச்சு இனிமையாக இருக்கும். அவர் கோபித்து நான் பார்த்ததேயில்லை. அப்பேர்ப்பட்ட எஜமானுக்கு நான் துரோகம் செய்து விட்டேன். அதற்குப் பிராயச் சித்தமாக அதே தங்கக் கட்டிகளை உங்களுக்குக் கொடுத்து உதவ வேண்டுமென்ற எண்ணம் எழுந்தது. எனவே குடியானவன் போல் வேஷம் போட்டுக் கொண்டு உங்கள் வீட்டுக்கு வந்தேன். அங்கேயும் எனக்கு மற்றொரு ஆச்சரியம் காத்திருந்தது. உங்கள் பெண் கமலா எனக்கு என் இறந்து போன மகளை நினைவூட்டுகிருள். செல்வி மட்டும் உயிருடன் இருந்தால் கமலாவுக்கும் அவளுக்கும் வித்தியாசம் இருக்காது.

நான் திருடனுக இருந்த பொழுதிலும், ஒரு காலத்தில் மானமாகக் காலத்தைக் கழித்தவன் தானே! என் மகள் இறந்து போனலும் என்னல் அவளை மறக்க முடியவில்லை. அவளைப் போலவே கமலாவும் இருப்பதால் கமலாவைப் பார்த்தவுடனே என் மனம் சற்று நிம்மதியடைகிறது. என் மன நிம்மதிக்காகவே நான் அடிக்கடி இங்கு வருகிறேன். உங்கள் பெண்ணைப் பார்த்தவுடன் நான் குடிசையில் கழித்த இன்பமான நாட்கள் நினைவுக்கு வருகின்றன. தாங்க முடியாத மனவேதனையும் அதைப் பின் தொடர்ந்து வருகிறது.

ஆரம்பத்திலிருந்தே இந்தப் பிழைப்பில் எனக்கு வெறுப்பு. இப்பொழுது கொஞ்ச நாட்களாகப் பழைய இன்ப நினைவுகளும் வரவே என்னல் தாங்க முடியவில்லை. மானமாகக் காலம் கழிப்பதை விட்டு விட்டு நியாய விரோதமான செய்கையில் இறங்கிய எனக்கு மன நிம்மதி எப்படி உண்டாகும்!

முதலில் சிறிது காலத்திற்குக் 'கல் நெஞ்சர்களைத் தண்டிக்க வேண்டும்' என்ற எண்ணம் எனக்கு இருந்து வந்தது. நான் செய்யும் காரியம் தர்ம விரோதமானது; சட்டவிரோதமானது. அப்படி இருக்கும் பொழுது அவர்களைத் தண்டிக்க நான் யார்! தவிரவும் எல்லோருக்கும் மேலே ஆண்டவன் இருக்கிருன்."

அவன் இதைச் சொல்லிவிட்டு தன் மடியிலிருந்து ஒரு பொருளை எடுத்தான். அது ஒரு சிறிய படம். வெள்ளி பிரேம் போடப்பட்டிருக்

தது, முருகப் பெருமான் வேல்தாங்கி அந்தப் படத்தில் காட்சியளித்துக் கொண்டிருந்தார்.

"இந்தப் படத்தில் இருக்கும் சுவாமி பேரில் எனக்கு உள்ள பக்தி சொல்லி முடியாது. வீரம்மா பெயரில் எனக்கு எவ்வளவு அன்பு இருந்ததோ, செல்லியின் மேல் எவ்வளவு பாசம் இருந்ததோ, அவ்வளவு பக்தி முருகன் மேல் எனக்கு உண்டு. நான் நடத்தும் பாவ வாழ்க்கையினால் என் மனம் நிம்மதி யில்லாமல் தவிக்கிறது. ஜனங்களெல்லாம் என் பெயரைக் கேட்டாலே பயப்படுகிறார்கள். அப்படி யிருக்கும் பொழுது நான் சுவாமி பக்தனாக எப்படி இருக்க முடியும்! ஆனால் ஒன்று: இந்தப் படத்தை விட்டு எப்பொழுதும் பிரியாமல் இருந்ததால் தான் இதுவரையில் நான் ஒருவரையும் கொலை செய்ததில்லை. யாரையும் தொட்டது கூடக் கிடையாது. அதற்கு அவசியமும் ஏற்பட்டதில்லை.

"சாமி! என்னால் இனிமேல் இங்கு இருக்க முடியாது. கண்காணாத தூரதேசத்துக்குப் போய்விடப் போகிறேன், போவதற்கு முன்னால் உங்களைக் கண்டு சொல்லிவிட்டுப் போவதற்குத் தான் வந்தேன். எப்படியாவது கமலா சௌக்கியமாயிருந்தால் போதும். நான் போய் வரட்டுமா!"

"மெள்ளப் போகலாம். அதற்குள் என்ன அவசரம், மிஸ்டர்!" என்ற குரல் கேட்டு சாமிக்கண்ணு, சாஸ்திரிகள் இருவரும் திரும்பிப் பார்த்தார்கள்.

இன்ஸ்பெக்டர் வேலாயுதம் ஏழெட்டுக் கான்ஸ்டபிள்களுடன் நின்றுகொண்டிருந்தார். கையில் வைத்துக் கொண்டிருந்த படத்தை அவசர அவசரமாக மடியில் வைத்துக் கொண்டான் சாமிக்கண்ணு.

"இந்தாப்பா முனுசாமி, இவனை 'அரெஸ்ட்' பண்ணு! இன்று வகையாக அகப்பட்டுக் கொண்டான்" என்று ஒரு கான்ஸ்டபிளை நோக்கிக் கூறிவிட்டு சாஸ்திரிகள் பக்கம் திரும்பி, "உங்களுக்கு அரசாங்கமே மிகவும் கடமைப்பட்டிருக்கிறது. உங்கள் சம்சாரம் மட்டும் சரியான சமயத்தில் வந்து சொல்லியிருக்காவிட்டால் இன்று இவன் தப்பியிருப்பான். பிறகு இவன் எங்கே அகப்பட்டுக் கொள்ளப் போகிறான்!" என்றார் வேலாயுதம்.

பிரமை பிடித்தவர் போல் நின்று கொண்டிருந்தார் சாஸ்திரிகள். சாமிக்கண்ணு இன்ஸ்பெக்டரால் இழுத்துச் செல்லப்பட்டான். அப்பொழுது சாஸ்திரிகளை அவன் பார்த்த பார்வை!...

**வி**சாரணை நடந்தது. சங்கர சாஸ்திரிகளுடைய சாக்ஷியத்திற்கு அவசியமே யில்லை. தன் மேல் சாட்டப்பட்டிருந்த குற்றங்களையெல்லாம் சாமிக்கண்ணுவே ஒப்புக்கொண்டான். சமூக விரோதியாக விளங்கியதற்காக அவனுக்கு மூன்று வருஷங்கள் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

விடுதலையடைந்த பின் அவன் நேராக ராமபுரத்தை யடைந்தான்.

இருட்டும் சமயம். மூன்று வருஷங்கள் சிறையிலிருந்ததால் இளைத்து உருமாறிப் போயிருந்த அவனை யாரும் கண்டு கொள்ளவில்லை. நேராகச் சங்கர சாஸ்திரிகளின் வீட்டை யடைந்தான். வாசல் கதவு திறந்திருந்தபடியால் நேரே உள்ளே சென்றான்.

கூடத்தில் உட்கார்ந்திருந்த பிரஹதாம்பாள் "யார் அது!" என்று கேட்டுவிட்டு அரிக்கன் விளக்கின் திரியை உயர்த்தினாள். பின்புறம் அம்பி சந்தியாவந்தனம் செய்து கொண்டிருந்தான்.

எதிரே நின்றுகொண்டிருந்த சாமிக்கண்ணுவைக் கண்டதும் பிரஹதாம்பாள் மூர்ச்சையடைந்து விடவில்லை. ஒருவேளை அடையாளம் தெரியவில்லை போலிருக்கிறதென்று நினைத்து, "நான்தான் அம்மா, சாமிக்கண்ணு! கொஞ்சம் பெரிய மனது பண்ணி ஐயாவைக் கூப்பிடுகிறீர்களா!' இதுவரையிலும் நான் ஒருவரையும் ஒன்றும் செய்ததில்லை. இனியும் ஒன்றும் செய்யப் போவதில்லை. அவர் தைரியமாக என் முன்னால் வரலாம்" என்றான். இதற்குள் அம்பியும் அங்கு வந்தான்.

அவன் குரலில் குரோதம் தொனித்தது. பிரஹதாம்பாள் ஒன்றும் அச்சப்படவில்லை. தெளிவான குரலில், "நீ இன்று வருவாயென்று அம்பிகூடச் சொன்னான். உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்" என்றாள்.

அதைக் கேட்டதும் அவன் ஒருகணம் ஸ்தம்பித்துப் போய்விட்டான். அதற்குள் பிரஹதாம்பாள், "அப்பா! ஒரு பத்து நிமிஷம் நான் சொல்வதைக் கவனமாகக் கேள்" என்று சொல்ல ஆரம்பித்தாள்.

இதில் ஏதோ சூது இருக்கிறது என்று அவன் மனம் எண்ணியது.

"ஐயாவைப் பார்க்க வேண்டுமென்று சொல்கிறாய். அவர் இந்த உலகத்தில் இருந்தால் தானே நீ அவரைப் பார்ப்பதற்கு!" என்றாள் பிரஹதாம்பாள்.



ஆபிஸ் மானேஜர்:—நீர் ரொம்ப அதிர்ஷ்டசாலி, ஐயா! காலையிலிருந்து இதுவரையில் ஏழு பேர் என்னைப் பேட்டி காண வந்தார்கள். மறுத்து அனுப்பி விட்டேன். உங்களுக்கு மட்டும்தான் என் பேட்டி கிடைத்தது.

வேலைக்கு வந்தவர்:—ஏழு தடவை வந்தவர்கள் வேறு யாரும் இல்லை. நான்தான், ஸார்!

அவன் அப்பொழுதுதான் அவளை நன்றாகக் கவனித்தான். அவளுடைய விதவைக்கோலம் தெளிவாகத் தெரிந்தது.

"அவர் குற்றமற்றவர். குற்றம் செய்தவள் நான். ஆனால் அதற்குப் பொறுப்பாளி நீ.......

"இந்த வீட்டுக்கு அநேகம் தடவைகள் நீ வந்திருக்கிறாய். உன் பார்வை கமலாவின் மேல் விழவே அதை நான் வேறுவிதமாக அர்த்தம் செய்துகொண்டேன். அப்பொழுது நீயோ பிரபல திருடனாக விளங்கினாய். ஒரு இளம் பெண்ணைக் காரணமில்லாமல் அடிக்கடி நீ பார்க்க வரவே என் சந்தேகம் பலத்தது. கடைசியாகப் பொங்கல் பண்டிகையன்று வந்ததும் நீ ஏதோ சொல்லவே, நான் மிகவும் பயந்துவிட்டேன். கமலாவைப் பற்றி விசாரித்ததும் உடனே உன்னைப் போலீஸாரிடம் ஒப்புவிக்கத் தீர்மானித்து விட்டேன். நீ சொல்வது முழுவதையும் கேட்டிருந்தால், அம்மாதிரி செய்திருக்க மாட்டேன். அதன் விளைவும் விபரீதமாக முடிந்தது. என் கணவருக்குத் தெரியாமல் நான் செய்த செய்கை அவர் உயிருக்கே உலை வைத்தது. உன்னைப் போலீசார் பிடித்துக் கொண்டுபோன அன்று படுத்தவர்தான். பிறகு எழுந்திருக்கவில்லை. என் குற்றத்தின் பலனை நான் அனுபவித்தேன்.

"உன்னை ஏமாற்றுவதற்காக நான் பேசவில்லை. உன்னை ஏமாற்றவேண்டும் அல்லது உன் கண்களில் படாமல் தப்பித்துக்கொள்ள வேண்டுமென்ற எண்ணம் மட்டும் எனக்கிருந்திருந்தால் எப்பொழுதோ இந்த ஊரைவிட்டுப் போயிருப்பேன். ஆனால் இறந்துபோன என் புருஷரின் ஆத்மா சாந்தியடைய வேண்டுமென்றால் அவர்மேல் உனக்கு ஏற்பட்டிருக்கும் சந்தேகத்தை அகற்ற வேண்டும் அல்லவா! அதற்காகவே இங்கு இருக்கிறேன். அதற்கு மற்றொரு காரணமும் இருக்கிறது" என்று கூறிவிட்டு அம்பியைப் பார்த்து "அந்தப் பையை எடுத்துக் கொண்டுவா!" என்றாள்.

அம்பி ஒரு பையைக் கொண்டுவந்து பிரஹதாம்பாள் கையில் கொடுக்கவே அதைக் காட்டி, "இந்தப் பை நீ முன்பு கொடுத்தது தான். கமலாவின் கல்யாணத்துக்காக மூன்று தங்கக் கட்டிகளுடன் கொடுத்தாயே, நினைவிருக்கிறதா! ஆனால் அவள் தகப்பனாருக்கு இதை வைத்துக்கொண்டு அவள் விவாகத்தை நடத்த இஷ்டமில்லை. மறுபடியும் உன்னிடமே திருப்பிக் கொடுத்துவிடத் தீர்மானித்திருந்தார். கல்யாணத்தின் பொழுது அதைக் கொடுக்க முடியவில்லை. மறுபடியும் மூன்று தரம் நீ வந்தபொழுது அவர் வீட்டில் இல்லை. கடைசி முறையாக வந்தபொழுது விபரீதம் நேர்ந்துவிட்டது. அதனால் பரவாயில்லை. உன்னைப் பிடித்துத் தந்ததற்காக ஆயிரம் ரூபாய் கிடைத்திருக்கிறது. அதையும் இதற்குள்ளேயே வைத்திருக்கிறேன். எடுத்துக் கொண்டு உசிதம்போல் செய்!" என்றாள்.

மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்த அவன் கண்களில் நீர் அரும்பியது. அதைத் துடைத்துக்கொண்டு, "அம்மா! இங்கு வரும் பொழுது நான் நினைத்ததே வேறு. உலகத்திலேயே நான்தான் 'பெருந்தன்மை' உள்ளவன் என்று எண்ணிக்கொண்டு வந்தேன். ஆனால் எனக்காக உயிரையே கொடுத்த உத்தமர் ஒருவர் இருக்கிறார். நான் அவரை சந்தேகித்தேன் என்ற எண்ணமே அவரைக் கொன்றுவிட்டது. உங்களால் நான் தண்டனையடைந்தேன் என்பது உண்மைதான். கடவுள் நான் செய்த பாவத்துக்காக உங்கள் மூலமாக என்னைத் தண்டித்தார். என்னால் கிடைத்த பணம் முழுவதையும் நீங்களே வைத்துக் கொள்ளுங்கள்; அல்லது உபயோகமான வழியில் செலவு செய்யுங்கள். சாமிநாதய்யரின் மகளிடம் முடியுமானால் அந்தத் தங்கத்தைச் சேர்த்து விடுங்கள். இல்லாவிட்டால் உங்களிஷ்டப்படி செய்யுங்கள்!" என்று கூறிவிட்டு வேகமாகப் போய்விட்டான்.

சாமிநாதய்யர் குடும்பமே நிர்மூலமாகி விட்டபடியால் பிரஹதாம்பாள் அந்தப் பணத்தைக் கொண்டு இந்தச் சத்திரத்தைக் கட்டி 'சங்கரஸ்வாமி' சத்திரம் என்று பெயர் வைத்து விட்டுத் தன் இளைய பெண்ணுடன் பம்பாய்க்குப் போய்விட்டாள்.

கேவலம் அவன் திருடனாக இருந்த பொழுதிலும் சங்கர சாஸ்திரிகள் அவனைக் காட்டிக் கொடுக்க விரும்பவில்லை. அவன் தனது பூர்வ கதையையும் சொல்லவே அவர் மனதிலிருந்து சந்தேகமும் நீங்கியது. ஆனால் அப்பொழுதுதான் அவனுக்கு அவர் மேல் சந்தேகம் எழுந்தது. தன் மனைவி அவனைக் காட்டிக் கொடுத்தாள் என்று தெரிந்த உடனே அவர் அதிர்ச்சியடைந்தார். அதுவே அவர் இறந்து போவதற்கும் காரணமாகியது.

அவர் செய்த தியாகத்தின் சின்னமாக இந்தச் சத்திரம் விளங்குகிறது. பணம் பெரும்பாலும் சாமிநாதய்யருடையது. அது சாமிக்கண்ணுவின் மூலமாகச் சத்திரம் கட்ட உதவிற்று. எனவே சத்திரத்திற்கு 'சங்கரஸ்வாமி' சத்திரம் என்ற பெயர் தேர்ந்தெடுக்கப்பட்டது. நான் அதனுடைய நிர்வாகியாக இருக்கிறேன்" என்று சொல்லிக் கதையை முடித்தார் கிருஷ்ணஸ்வாமி.

"நீங்கள் சொல்வதெல்லாம் சரிதான். ஆனால் சாமிக்கண்ணுவின் வரலாறு, அவனுக்கும் பிரஹதாம்பாளுக்கும் நடந்த சம்பாஷணை எல்லாவற்றையும் இவ்வளவு விளக்கமாகக் கூறுகிறீர்களே உங்களுக்கு இவையெல்லாம் எப்படித் தெரிந்தது!" என்று ஒரு சந்தேகத்தைக் கிளப்பினேன்.

"என் ஐயா! உமக்குக் கொஞ்சம் கூடக் கற்பனா சக்தியே கிடையாது போலிருக்கிறதே! பள்ளிக்கூடத்துப் பிள்ளைகள் உபாத்தியாயரைக் கேள்வி கேட்பது போல் கேட்கிறீரே! நான் நடந்த சம்பவங்கள் அனைத்தையும் விவரமாகக் கூறுவதிலிருந்தே நான் யார் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டாமா! 'அம்பி' என்று சொன்னேனே அந்த அம்பி யார் தெரியுமா! சாக்ஷாத் நானேதான்!" என்று கூறி முடித்தார் கிருஷ்ணஸ்வாமி.

"அப்படியா சமாசாரம்! ஆகவேதான் சங்கரசாஸ்திரிகளின் பெயரில் முன் பகுதியையும் உங்கள் பெயரில் பின் பகுதியையும் ஒன்றாகச் சேர்த்து 'சங்கர ஸ்வாமி சத்திரம்' என்று பெயர் வைத்து விட்டீர்களோ!" என்று குறும்பாகக் கேட்டவாறே எழுந்தேன்.

# அத்திப்பூ

ரா. வி.

மஞ்சன் மாளிகை என்பது இந்த ஏழையின் குடிசைக்குப் பெயர். வீடு கட்டினதிலிருந்து உள்புறம் என்ன வர்ணம் அடித்தாலும் வெளிப்புறம் மட்டும் மஞ்சன் வர்ணம் அடிக்கத் தவறுவதில்லை. பெயருக்கேற்ற குணம் வேண்டும் அல்லவா? கண்ணோ குருடு, பெயரோ கமலக் கண்ணன் என்று ஆகிவிடக் கூடாது என்பதற்காகவே வெளிப்புறம் மஞ்சன் வர்ணம் அடிப்பதில் மிகவும் கவனம் செலுத்தி வந்தோம். ஆனால் பொது மக்களிடையே அது அத்தி மர வீடு என்று தான் வழங்கி வருகிறது. காரணம் என்ன வென்றால் எங்கள் வீட்டு வாசலிலே ஒரு மிகப் பெரிய அத்தி மரம் இருக்கிறது. எந்தக் காலமானாலும் சரி, அந்த மரத்தில் மிக மிக இனிப்பான அத்திப் பழங்கள் இருந்த வண்ணமேதான் இருக்கும். ஆகவே தெருப் பூராவிலும் உள்ள ஆடுகளும் ஆட்டுக் குட்டிகளும்—ஆட்டுக் குட்டிகள் மட்டும்தானா? — மானிடக் குஞ்சுகளும் கூடத்தான்! பகல் நேரம் முழுவதும் 'ஜே, ஜே' என்று கூடியிருக்கும். இரவு நேரங்களில் வௌவால்கள் கூடி மாபெரும் நகரத்தையே—இல்லை, இல்லை! நரகத்தைச் சிருஷ்டித்து விடும்.

அத்தி மரம்! அத்தி மரத்தைப் பற்றி உங்களுக்குத் தெரியும் அல்லவா? 'ஏது, ஏது? அத்தி பூத்தாற் போலிருக்கிறதே! ரொம்ப நாளாக உன்னைக் கண்ணிலேயே காணுமே?' என்று நீங்கள் வெகு நாட்களாகக் கண்ணில் படாத சிநேகிதர்களைக் கேட்பது உண்டல்லவா? ஆகவே, உங்களுக்கு மரத்தைப் பற்றி அவசியம் தெரிந்துதான் இருக்க வேண்டும். பூ பூக்காமல் காய் காய்க்கும் மரம் ஒன்று உண்டென்றால் அது அத்தி மரம்தான். இன்று வரை யாருமே அத்திப் பூவைப் பார்த்த தில்லை. ஆகவேதான் ஒரு நாட்டு வைத்தியர் ஒரு தடவை தன் மாணவர்களைப் பரீட்சிக்கும் பொழுது மருந்துக் குறிப்பில் ரோஜாப் பூ, எருக்கம் பூ என்று சொல்லிக் கொண்டே வரும்பொழுது அத்திப் பூவையும் சேர்த்துச் சொல்லி விட்டார். யார் யாரெல்லாம் அத்திப் பூவையும் மருந்துக் குறிப்பில் சேர்த்துக் கொண்டார்களோ, அவர்களுக்கெல்லாம் பரீட்சையில் பெரிய சுன்னமாகப் போட்டுப் 'பெயில்' ஆக்கி விட்டார். ஏன் தெரியுமா? அத்திப் பூ என்று சொல்லும்பொழுது ஆச்சரியப் படாமல் மருந்துக் குறிப்பில் சேர்த்துக் கொண்டு எழுதிய மாணவர்களா வைத்தியம் பார்த்துக் குப்பை கொட்டப் போகிறார்கள்? இது கூடத் தெரியாத மாணவர்கள் வைத்தியம் பார்க்கத் தொடங்கி விட்டால் நகரத்தில் எண்ணிக்கை அதிகரிப்பதற்குப் பதிலாக நரகத்திலோ சொர்க்கத்திலோ எண்ணிக்கை அதிகரிக்க ஆரம்பித்து விடும். அப்புறம் பிரஜா உரிமைச் சட்டம் அங்கேயும் அமுலுக்கு வந்து 'திரும்பிப் போ!' என்ற கோஷம் எழுந்தால் நம் நாட்டு மக்கள் அல்லவா நசுக்கப் படுவார்கள்! இதை யெல்லாம் தீர ஆராய்ந்து அறிந்துதான் திரிகால ஞானியாகிய அந்த வைத்தியர் அத்திப் பூவை மருந்துக் குறிப்பில் சேர்த்துக் கொண்ட மாணவர்களுக்கெல்லாம் பெரிய சுழியாகப் போட்டு நரகத்திலே பிரஜா உரிமைச் சட்டம் அமுலுக்கு வராமல் காப்பாற்றினார்போலும்! அத்திக்குப் பூ கிடையாது என்பதற்கு இதைக் காட்டிலும் வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

அத்திக்குப் பூ உண்டு என்பதற்கும் எத்தனையோ சான்றுகள் இருக்கின்றன. அதையும் கேளுங்கள். வீட்டில் உள்ள வயது முதிர்ந்த அத்தைமார்களும் பாட்டிமார்களும் "அத்திக்குக் கட்டாயம் பூ உண்டு. பூ பூக்காமல் பழம் பழுப்பதில்லை. 'பூ இல்லாத பூ என்ன பூ?' என்று பூவைப் பற்றி நாங்கள் விடுகதை போட்டு 'சாயப் பூ' என்று சொல்லி விடுவித்திருக்கிறோமே யொழிய பூ பூக்காமல் காய் காய்க்கும் மரத்தைப் பற்றி நாங்கள் கேள்விப்பட்டதே யில்லை. ஆகவே அத்திக்குக் கட்டாயம் பூ உண்டு. ஆனால் அது கண்ணுக்குத் தெரிவதில்லை" என்று தான் சொல்லியிருக்கிறார்கள். அத்திப் பூவைப் பற்றி இன்னொரு விசேஷம் என்னவென்றால், ஒரு மரத்துக்கு ஒரு பூத்தான் பூக்கும். அதுவும் இரவு சரியாக மணி பன்னிரண்டு அடிக்கும் பொழுதுதான் பூக்கும். அத்திப் பூ பூத்ததோ இல்லையோ, உடனே அப்ஸரப் பெண்களின் சிம்மாசனம் வந்துவிடும். அப்ஸர கன்னிகைகள் அந்தப் பூவைப் பறித்துக் கொண்டு பறந்து விடுவார்கள். ஆகவேதான் அது யார் கைக்கும் கிட்டுவதில்லை. தப்பித் தவறி அது யார் கைக்காவது கிடைத்து விட்டால் அப்புறம் புதையலே கிடைத்து விட்ட மாதிரிதான். காரணம் என்ன தெரியுமா? அதற்கு அலாதியான ஒரு குணம் உண்டு. அத்திப் பூவை ஒரு பொருளில் போட்டுவிட்டால் அந்தப் பொருளை அள்ளி அள்ளிச் செலவழித்தாலும் அது குறைவதில்லை. பணத்தில் போட்டுவிட்டால் பணம் செலவே ஆவதில்லை. தானியத்தில் போட்டு விட்டால் எவ்வளவு தான் எடுத்துச் செலவழித்தாலும் குறைவ

இல்லை. ஆகவே எந்தப் பாக்கியசாலிக்காவது அத்திப்பூ கிடைத்து விட்டால், கிடைத்தற்கரிய மாபெரும் பொக்கிஷம் அவனுக்குக் கிடைத்து விட்டதாகவே நிர்மானித்து விடலாம் என்பதுதான்.

கண்டிரோலும் ரேஷனும் பிராணனை வாங்கிக் கொண்டிருக்கும் இந்தக் காலத்தில் ஒரு அத்திப் பூ கிடைத்தால் நம் வீட்டுக் கொட்டிலில் இருக்கும் நெற்குதிரில் போட்டு வைக்கலாமே என்று உங்களுக்கு எண்ணத் தோன்றுகிறதல்லவா? கள்ளமார்க்கெட் காரர்களின் கையில் அத்திப் பூ அகப்பட்டிருக்குமோ என்று எனக்கு வெகு நாளாகவே ஒரு சந்தேகம். காசை வீசி எறிந்தால் அவர்களிடம் கிடைக்காத பொருள் என்ன? கள்ள மார்க்கெட்காரர்களின் கையில் கிடைத்தது நம் கையில் கிடைத்திருக்கக்கூடாதா என்று காருண்ய சர்க்கார்கூட ஏங்குவதாகக் கேள்வி!

சரி. அது எப்படியாவது போகட்டும். பாட்டிமார்களிடத்திலும் அத்தைமார்களிடத்திலும் தலைமுறை தலைமுறையாக இன்னொரு கதையும் வழங்கி வருகிறது. என்ன தெரியுமா? ஒரு தயிர்க்காரியின் தயிர்ப் பானையிலே தற்செயலாக ஒரு அத்திப் பூ விழுந்து விட்டதாம். அந்த அதிர்ஷ்டக் கட்டைக்கு இந்தச் செய்தி தெரியவில்லை. அவள் தயிர் விற்ருளாம், விற்ருளாம்; அப்படி விற்ருளாம். தயிர் கொஞ்சமாவது குறைந்தால் தானே? தயிர்ப் பானையுடன் தெருத் தெருவாகச் சுற்றி அவளுடைய கால்கள் ஓய்ந்து விட்டன. கடைசியில் அலுத்துப் போய் ஆத்திரத்துடன் தயிர்ப் பானையைப் போட்டு உடைத்துவிட்டு வீட்டுக்குப் போய் விட்டாளாம்.

இந்தக் கதையில் நம் அத்தைமார்களும் பாட்டி மார்களும் இன்னொரு விஷயத்தைச் சொல்ல மறந்து விட்டார்கள். அந்தத் தயிரைத்தான் அநாதி காலந் தொட்டு நம் முனிசிபாலிடித் தோட்டிகள் வாரி எடுத்துக் கொண்டு கண்காணாத இடத்தில் கொட்டிப் பார்க்கிருர்கள். ஆனல் அது குறைவதாகவே காணும். அத்திப் பூ விழுந்திருக்கும் பொழுது அது எங்கேயாவது குறையுமா?

'இதற்கு இவ்வளவு நீண்ட முகவுரை எதற்கு?' என்று நீங்கள் நினைக்கலாம். என் வீட்டுக்கு வரும் ஒவ்வொரு விருந்தாளியிடமும் அநேகமாக அத்திப் பூவைப் பற்றியும், அத்திப் பூ சம்பந்தமான ஆராய்ச்சியைப் பற்றியும் நான் சொல்ல வேண்டாம் என்று நினைத்தாலும் சொல்லாமல் இருக்க முடிவதில்லை. அதுவும் கோடைக் காலமாயிருந்து விட்டால் கேட்கவே வேண்டியதில்லை. கட்டாயம் ஒவ்வொருவரிடமும் சொல்லியேதான் தீர வேண்டும். ஏனெனில் இரவு வேளைகளில் சாப்பிட்டானதும் புழுக்கமான அறையில் உட்கார்ந்திருக்க முடிவதில்லை. ஆகவே கயிற்றுக் கட்டிலை எடுத்துப் போட்டுக் கொண்டு அத்தி மரத்தினடியிலே கண் அயர்வதற்காகப் படுக்கையைப் போடுவோம். அத்தி மரத்தைப் பார்த்ததும் அவர்கள் "இது என்ன, நாவல் மரமா?" என்று கேட்பார்கள். அம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் இது அத்தி மரம் என்றும் அத்தி மரத்தின் விசேஷம் இது வென்றும் அவர்களுக்கு ஒரு முறை ராமாயணம் படித்துத் தான் ஆக வேண்டியிருக்கிறது!



அது கிடக்கட்டும். ஒரு சமயம் நண்பன் நடராஜன் வந்திருந்தான். அவனும் எல்லோரையும் போலவே இதே கேள்வியை என்னிடம் கேட்டான். அவனுக்கு ரத்தினச் சுருக்கமாக அத்திப் பூவைப் பற்றியும் அத்திப் பூவைப் பற்றி வழங்கும் கதையைப் பற்றியும் சொல்லி விட்டுக் கண் அயருவோம் என்ற எண்ணத்துடன் புரண்டு படுத்துக் கொண்டு மௌனம் சாதித்தேன். எனக்கு எப்பொழுதுமே பகலில் ஒரு தூக்கம் போட்டுப் பழக்கம். அன்று என்னடா வென்றல் மேல் மாடியில் 'டொக் டொக்' என்று பஞ்சு அடித்துக் கொண்டிருந்தார்கள். அந்தத் தலைவேதனையில் தூக்கம் வரவில்லை. பகல் பொழுதுதான் அப்படிப் போயிற்று? சாயந்திரம் நண்பன் நடராஜனின் தொந்தரவு பொறுக்கமாட்டாமல் ஆறு மணி ஆட்டத்துக்குச் சினிமா பார்க்கப் போகும்படியும் ஆகி விட்டது. திரும்பி வரும் பொழுது மணி பத்து அடித்து விட்டது. சீக்கிரமாகச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு அத்திமரத்தினடியில் படுக்கையைப் போட்டோம். உண்ட மயக்கம் தொண்டனுக்கும் உண்டல்லவா? அப்படியிருக்கும் பொழுது என்னைப் போன்ற சோம்பேறியைப் பற்றிக் கேட்பானேன்? தூக்கம் கண்ணை முட்டவே, நான் புரண்டு படுத்துக் கொண்டு கண்களை இறுக மூடிக் கொண்டேன். அத்திப் பூக் கதையே அதி

அற்புதமானதல்லவா? அது நண்பன் நடராஜனின் மூளையில் புகுந்து வேலை செய்திருக்கிறது. அத்திப் பூவின் ரகசியத்தை அறிந்து கொள்ள அவன் ஆனானப்பட்ட பாடு பட்டுப் பார்த்திருக்கிறான். நானும் மௌனமாக சித்திராதேவியின் அரவணைப்பில் இந்த உலகத்து நினைவையே மறக்கலானேன். நடராஜன் என்ன நினைத்தானோ, என்னவோ! "ஏன் அப்பா, நீ சொல்வது வேடிக்கையாக அல்லவா இருக்கிறது! இப்படி எங்கேயாவது நடக்குமா?" என்றான். நான் அரைத் தூக்கத்தில் இருந்தேனோ? அவன் சொன்னதைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் 'உம்' கொட்டினேன்.

"ஏன் அப்பா, தூங்கி விட்டாயா, என்ன?" என்று கேட்டான் நடராஜன்.

அந்தக் கேள்விக்கும் நான் 'உம்' தான் கொட்டினேன்.

"அத்திப் பூ சரியாக இராத்திரி பன்னிரண்டு மணிக்குத்தான் பூக்கிறது. அதை அப்ஸர கன்னிகைகள் எடுத்துக் கொண்டு போகிறார்கள் என்னும் விஷயம் நம்பக் கூடியதாக இல்லையே, அப்பா!"

"........." இதுதான் என் பதில்.

"டேய், தூங்கி விட்டாயா, என்ன?"

"ஊஹூம், ஊஹூம்" என்றேன்.

"உனக்கு இதெல்லாம் உண்மையானது என்று தோன்றுகிறதா?"

"உம்"

"திருவாயை மலர்ந்து தெளிவாகச் சொல்லேன்! இது உண்மையாக இருக்குமா?" என்று கேட்டான் அவன்.

"ஊஹூம்" என்றவாறே புரண்டேன்.

"உன் அபிப்பிராயம் என்ன, அப்பா?" என்றான்.

"உம், உம்" என்றேன்.

"நல்ல 'ஊஹூம்' வேண்டிக்கிடக்கிறது! தூக்கம் வந்தால் தூங்கித் தொலையேன்! எதற்காக 'உம்' கொட்டிப் பிராணனை வாங்குகிறாய்?" என்று 'சள்' என்று எரிந்து விழுந்தான் நடராஜன்.

எனக்குத்தான் தூக்கம் கண்ணைச் சுற்றிக் கொண்டிருந்ததா? அநுமதி கிடைத்து விட்ட மகிழ்ச்சியில் கால்மாட்டிலிருந்த தலையணையை எடுத்துப் பக்க வாட்டில் போட்டுக் கொண்டு நிம்மதியாகத் தூங்கினேன். நான் கண் மூடி ஒரு மணி நேரம்கூட தூங்கியிருக்காது. நடராஜன் என்னைப் பிடித்து உலுக்கி எழுப்பினான். என் காதருகில் தன் முகத்தை கொண்டு வந்து, 'ஏய், எழுந்திரு! அத்திப்பூ அப்பா, அத்திப்பூ!'' என்றான்.



புரண்டு புரண்டு படுத்துக் கொண்டிருந்த நான் அத்திப்பூவின் பெயரைக் கேட்டதும் சுருட்டி மடக்கிக் கொண்டு எழுந்திருந்தேன். நடராஜன் தன் வாயில் விரலை வைத்துப் பேசாமல் இருக்குமாறு சமிக்ஞை செய்தான். பிறகு இன்னொரு கையின் ஆள் காட்டி விரலினால் அத்திப் பூவைக் காண்பித்தான். முதலில் நான் அவனுடைய விரலுக்கு நேராகப் பார்வையைச் செலுத்தினேன். இரண்டு நிமிஷங்களுக்கெல்லாம் இலை மறைவிலே தும்பைப் பூ போல 'வெள்ளை வெளேர்' என்று பிரகாசித்துக் கொண்டிருந்த பெரிய அத்திப் பூ ஒன்றைப் பார்த்தேன். அதைப் பார்த்த பின் அது அத்திப் பூ இல்லை என்பதை எப்படி மறுக்க முடியும்? நானும் அத்திப் பூவைப் பார்த்து விட்டேன் என்னும் மகிழ்ச்சியைத் தெரிவிப்பதற்கு அறிகுறியாக நடராஜனின் தோள்களைப் பிடித்து உலுக்கினேன்.

நடராஜன் என் காதருகில் வாயைக் கொண்டு வந்து மிகவும் மெதுவான குரலில், "இப்பொழுது சரியாக மணி பன்னிரண்டு. அப்ஸர கன்னிகைகள் வருவதைக்கூட நான் என் இந்தக் கண்களாலேயே கண்டேன். அவர்கள் சிறகு அடித்துக் கொண்டு பறக்கும் சத்தம் என் காதிலே விழுந்தது. நாம் அதைச் சீக்கிரம் அடைவதற்கான வழி செய்யாவிட்டால் அவர்கள் பறித்துக் கொண்டு போய் விடுவார்கள்! எழுந்திரு, அப்பா!" என்றான்.

"என்ன வழி செய்யலாம்? எப்படியும் இந்தப் பூ நம் கையை விட்டுப் போகக் கூடாது!" என்று நானும் நடராஜனுடைய காதோடு காதாகச் சொன்னேன்.

"விடுவதாவது? அதெல்லாம் கூடாது, கூடவே கூடாது! விலை மதிக்க முடியாத மாணிக்கத்தைக் கை நழுவவிடுவதென்றால் அது மிகவும் முட்டாள்தனம் அல்லவா? இந்தப் பூவுக்கு நீயும் நானும்தான் எஜமானன். ஒரு சட்டியில் நீ ஒரு நூறு ரூபாய் போடு, நான் ஒரு நூறு ரூபாய் போடுகிறேன். அப்புறம் இந்தப் பூவை அந்தச் சட்டியில் வைத்து விடுவோம். அப்புறம் நமக்கு என்ன

குறைச்சல்?' என்று மனக் கோட்டை கட்ட ஆரம்பித்து விட்டான் நடராஜன்.

நான் இடையில் குறுக்கிட்டு, "அதையெல்லாம் அப்புறம் பார்த்துக் கொள்ளலாம். முதலில் அந்தப் புஷ்பத்தை அடைய ஏற்பாடு செய்!" என்றேன்.

"சரி, அப்படியானால் நீ மரத்தில் ஏறு"

"உனக்குத்தான் என் சுபாவம் தெரியுமே! பெண்கள் என்றாலே எனக்குப் பயமும் சங்கோசமும் அதிகம். அதுவும் அப்ஸர கன்னிகைகள் என்றால் கேட்க வேண்டுமா? நீயே மரத்தில் ஏறு!" என்றேன் நான்.

"நானும் அந்தக் காரணத்தினால்தானே ஏற யோசிக்கிறேன். அப்ஸர கன்னிகைகள் இல்லா விட்டால் நான் இவ்வளவு நேரம் ஏறியிருக்க மாட்டேனா?" என்றான் நடராஜன்.

"அப்படியானால் ஒன்று செய்வோம். வேலைக்காரன் வேலுவை எழுப்பி மரத்தில் ஏறச் சொல்லுவோம். நாம் இருவரும் மரத்தின் கீழே துப்பாக்கி சகிதம் உட்காருவோம். வேலு ஏறுவதற்கு முன்பாக அப்ஸர கன்னிகைகள் பூவைப் பறித்து விடுவார்கள் போலத் தோன்றினால் நாம் பூவைச் சுட்டு வீழ்த்தி விடுவோம்" என்று ஆலோசனை சொன்னேன் நான்.

"ஊஹூம், அது கூடாது. துப்பாக்கியினால் சுடுவது தப்பு. அப்ஸர கன்னிகைகளுடன் விரோதம் ஏற்பட்டு விட்டால், அப்புறம் நாம் பூமியில் உயிர் வாழ முடியாது. வேலுவை மரத்தில் ஏறிப் பூவைப் பறிக்கச் சொல்லுவோம். அப்புறம் நம் தலையெழுத்துப்படி நடக்கட்டும் என்று விட்டுவிடுவோம். அதுதான் நியாயமான வழி" என்றான் நடராஜன்.

"சரி, அப்படியே செய்துவிட்டால் போயிற்று!" என்று சொல்லி வேலுவை எழுப்பினேன். அவனிடம் அந்தப் பூவைப் பற்றியோ அப்ஸர கன்னிகையைப் பற்றியோ ஒன்றும் சொல்லவில்லை. "அதோ, மரத்தில் வெளுப்பாக ஏதோ தெரிகிறதே. அதைக் கொண்டு வா!" என்று மட்டும்தான் சொன்னோம். வேலு உடனே என் உத்தரவுக்குக் கீழ்ப்படிந்து மரத்தில் ஏறினான். ஏறினதும் முதற் காரியமாகச் 'சடக்' என்று பூவைப் பறித்தான். பூ அவன் கையில் காட்சி அளித்தது. அப்ஸர கன்னிகைகள் சிறகு அடித்துக் கொண்டு பறந்து விட்டனர். வேலு மரத்திலிருந்து இறங்கியதும் பூவை எங்களிடம் கொண்டுவந்து கொடுத்தான். "அட, இது பஞ்சு அல்லவா!" என்று இருவரும் ஏக காலத்தில் சொல்லியவாறு துள்ளிக் குதித்தோம்.

"எஜமான்! இந்த மரத்துக்கு வௌவால்கள் ஏராளமாக வருகின்றன!" என்றான் வேலைக்காரன்.

"காலையிலே பஞ்சு அடித்துக் கொண்டிருந்தீர்களே அதை இப்படித் தாராளமாகப் பறக்க விட்டு விட்டீர்கள் போலிருக்கிறது!" என்றேன் நான். வேலைக்காரன் வேலு பதில் பேசாமல் அங்கிருந்து நகர்ந்து விட்டான்.

"பிரதர்! பன்னிரண்டு மணிக்குப் பூ பூப்பதும், அப்ஸர கன்னிகைகள் பறித்துக் கொண்டு போய் விடுவதும் வெறும் கட்டுக் கதை போலிருக்கிறது!" என்றான் நடராஜன்.

"ஆமாம், அப்படித்தான் இருக்க வேண்டும். பறந்து போன பஞ்சைப் பூ வென்றும், வௌவால்களை அப்ஸர கன்னிகைகள் என்றும் ஜனங்கள் எண்ணியிருப்பார்கள் என்றுதான் எண்ணத் தோன்றுகிறது" என்றேன்.

"ஆமாம். அதுதான் விஷயம்!" என்று சொல்லி நடராஜன் 'கட கட' வென்று பூமி அதிரும்படி சிரித்தான்.

"காலையில் என்னைச் சீக்கிரம் எழுப்பி விடாதே. நேரமாகிவிட்டது. தூங்கு!" என்று கொட்டாவி விட்டவாறே நான் படுக்கையில் படுத்தேன்.

[ஸ்ரீ ஜெகந்நாதனின் உருது கதையைத் தழுவியது.]



"என்னடி! ஆறு அவுன்ஸிலிருந்து ஐந்து அவுன்ஸ் அரிசியாக்கி விட்டார்களானால், நாம் என்னடி பண்ணுகிறது?"

"குறைக்கட்டுமே! நன்றாகக் குறைக்கட்டுமே!"

"என்னடி! நீ மட்டும் இப்படிச் சொல்லுகிறாய்?"

"அப்புறம் ஒரு அவுன்ஸ் அரிசிக்குக் கல் பொறுக்குகிற சிரமம் இருக்காதோல்லியோ? ரொம்ப சௌகரியந்தான்."

# நீங்கள் உங்கள் பற்களை
# இன்று மக்ளீன் செய்தீர்களா?



"உங்கள் பெராக்ஸைட் பற் பசையை ஒரு மாதத்திற்கு முன் நான் உபயோகிக்கத் தொடங்கினேன். அது ரொம்ப நன்றாயிருப்பதை அறிந்தேன். என் பற்கள் வினோதமாகக் கறைபடிந்திருந்தன; ஆனால் உங்கள் பற்பசையை உபயோகிப்பது முதல் அவை வெள்ளை வெளேரென்றாகி விட்டன."

மூச்சின் நாற்றத்தை போக்குகிறது.

ஊனைச் சுத்திகரித்து ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி பற்களுக்கு வெண்மை தருகிறது.

உங்களுக்கு சிறந்ததோர் பற் பசை வேண்டுமானால், மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற் பசையை உபயோகியுங்கள். மக்ளீன்ஸ் ஒன்றில்தான் பற்களை வெண்மையாக்கக் கூடிய பெராக்ஸைட் இருக்கிறது. இதன் பிரத்யேகமான தயாரிப்பு முறையினால் பல் கெடுவதைத் தடுக்க உதவுகிறது, வாயில் ஊறும் நீரை மிதப்படுத்தி, கறைகளைப் போக்கி, பற்களைப் பளபளப்பாகவும் வெளுப்பாகவும் ஆக்கி, சுவாசத்திற்கு பெப்பர்மென்டின் நறுமணத்தைத் தருகிறது.

இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்!




MTX-6TM



# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரஸ்வாமி

## 22. ஏமாற்றும் வித்தையல்ல!

சில நாட்களுக்கு முன் ஒரு நண்பர் சிகிச்சைக்காக வந்தார். வயது 23, உயரம் 5 அடி 3 அங்குலம். எடை 95 ராத்தல். மார்பின் சுற்றளவு 30 அங்குலம். உடம்பு வெளுத்து எலும்பும் தோலுமாய் இருந்தது. அவர் தம் சுய சரித்திரத்தைச் சொன்னார். ஏதோ ஒரு ஆபீஸில் ரூ 200ல் உத்தியோகம் என்றும் கலியாணமாகி ஒரு வருடம் ஆயிற்று என்றும், ஆனால் வாழ்க்கையில் இன்பம் அனுபவிக்க முடியவில்லை என்றும் கூறினார். மேலும் உடம்பில் ஒரே அசதி, அடிக்கடி தலைவலி வருகிறதென்றும் கூறினார். தலைவலியை முன்னிட்டு மூக்குக் கண்ணாடி அணிந்திருப்பதாகவும் அஜீரணம் பலஹீனம் இவற்றுக்காக பல வருடங்கள் ஏதேதோ மருந்துகளைச் சாப்பிட்டு வருவதாகவும் கூறினார். ஆனால் மொத்தத்தில் கணிசமான பலன் கிடைக்காமல் கடைசியில் என்னிடம் ஆலோசனைக்கு வந்திருப்பதாகக் கூறி முடித்தார்.

“எத்தனை வருடங்களாக இம்மாதிரி இருக்கிறது? எதனால் இப்படி ஆயிற்று என்று நினைக்கிறீர்கள்? உங்கள் பால்ய பருவ சரித்திரத்தைச் சொல்லுங்கள்” என்றேன்.

“அதைச் சொல்லவும் கூசுகிறது. நான் பன்னிரண்டு வயதிலிருந்தே என் வீர்யத்தைச் சுயமாய் நஷ்டமாக்கிக் கொண்டிருந்தேன். கலியாணத்தை வெகு ஆவலுடன் எதிர்பார்த்தேன். ஆனால் விவாகம் ஆனபிறகு எதற்கும் லாயக்கில்லாதவனாய் இருக்கிறேன். என்னைப் பற்றிக் கூடக் கவலைப்படவில்லை. என் மனைவியை—சிறு பெண்ணை நினைத்தால் கவலை பொறுக்க முடியவில்லை. அவளுக்காகவாவது பாழ்பட்டுப் போன என் நிலைமையைத் திருத்த முடியுமா என்று தங்களை நாடி வந்தேன்” என்றார்.

அந்தோ! என்ன பரிதாபம்! இம்மாதிரி ஒருவர் இருவர் அல்ல. நூற்றுக்கணக்கானவர்கள்! இவர்கள் தாங்கள் கஷ்டப்படுவது மல்லாமல், தங்கள் மனைவிமாராகிய சிறு பெண்களையுமல்லவா வதைக்க வேண்டியிருக்கிறது. யாரிடம் இக்குறையைச் சொல்ல முடியும்? அப்பெண்களின் கதி என்ன? பெற்றோர்கள், ‘பையன் எவ்வளவு படித்தான், என்ன சம்பாதிக்கிறான்’ என்று பார்க்கிறார்களே தவிர பலம் இருக்கிறதா? ஆரோக்கியமிருக்கிறதா? வீரிய முறுக்கு இருக்கிறதா என்று பார்க்கிறார்கள் இல்லை. இந்த நிலைமையில் உள்ள குடும்பங்களின் கதி என்ன? கெடுவதற்குச் சொல்ல வேண்டுமா? சட்ட மூலமாய் எத்தனை பேர் கோர்ட்டு ஏறி நிலைமையைச் சொல்லி விடுதலை கோரப் போகிறார்கள். அவ்வளவு தூரம் நமது இந்திய சமூகம் முன்னேறவில்லையே! இன்றுள்ள இந்திய சமூக நிலைமையில் இம்மாதிரி குடும்பங்கள் ஒரு பெரிய பிரச்னை.

மருந்து விளம்பரங்கள் மனதை மயக்குகின்றன. ரதி மன்மத லேகியம், மரத்தை இரண்டாகப் பிளக்கும் லேகியம், ஒரு மணி நேரத்தில் வாலிபத்தை உண்டாக்கும் மருந்துகள் என்று கண்ணைக் கவர்கின்றன. இம்மாதிரி விளம்பரங்களைப் படித்தாலே, மனித சமூகத்தின் குறைபாடுகள் விளங்கும்.

வாழ்க்கைக் குறையுள்ளவர்கள் இவைகளை வரப்பிரசாதமாக மதிப்பார்கள். மருந்துகளை ரகசியமாக வாங்குவார்கள். ரகசியமாகவே சாப்பிடுவார்கள். பலன் எவ்வளவு தூரம் ஏற்படுகிறதோ, யார் கண்டார்கள்! ஆனால் ஒன்று; இழந்துவிட்ட வீரிய பலத்தை, நரம்புணர்ச்சிகளை மருந்துகள் ஸ்திரமாய் உண்டாக்கிவிடும் என்று சொல்ல முடியுமா? ஏதோ லேசாகக் குறை உள்ளவர்களுக்கு இம்மருந்தினால் குணம் சற்று கண்டிருக்கலாம். ஆனால் அடுத்தபடி முன்னைவிட சக்தியிழந்து விடுவார்கள்.

இம்மாதிரி மருந்துகளையெல்லாம் உபயோகித்து ஒருவித பலனும் ஏற்படாமல் கடைசியில் யோக சிகிச்சையை நாடி வந்தவர்கள் அநேகர் உண்டு.

இக் குறை உள்ளவர்கள் பார்ப்பதற்குப் பலஹீனமாயும், எலும்பும் தோலுமாயும் முகம் வெளுத்து மட்டும் இருப்பார்கள் என்று நினைத்து விடக்கூடாது.

பார்ப்பதற்கு லக்ஷணமான தோற்ற முள்ளவர்களிலும் இம்மாதிரி கஷ்டப்படு கிறவர்கள் உண்டு. ஒரு அன்பர் வந்தார். அவர் உடல் கட்டுமஸ்தாய் இருந்தது. ஆரோக்கியமாயும் இருந்தார். அவர் சொல்லும் குறை நம்ப முடியவில்லை. ஆச்சரியப்படும்படி இருந்தது. "கலியாண மாகி எட்டு வருடம் ஆகியும் இதுவரை இல்லற சுகம் அனுபவிக்க முடியவில்லை. மனைவியிடம் நெருங்கும்போதே சக்தி யிழந்து விடுகிறது. சினிமாக்களில் சில கட்டங்களைப் பார்க்கும்போதும், ஆபாச மான சினிமா விளம்பரங்களைப் பார்க்கும் போதும், சொப்பனத்திலும் நஷ்ட முண் டாகிறது. என்னால் தடுக்க முடிய வில்லை!" என்றார்.

இவர் ஒரு பாங்கியின் மானேஜர்; கண்யமான குடும்பத்தைச் சேர்ந்தவர். இவருடைய இல்லறச் சரிதம் இம்மாதிரி இருக்கிறது. இதைப் போல எத்தனையோ குடும்பங்கள் இருக்கின்றன. இப்பேர்ப் பட்டவர்களின் கடிதங்கள் பல. பார்க்கப் பரிதாபமாய் இருக்கும். சிந்தனையில் அப் படியே ஆழ்த்திவிடும்.

இவர்களுக்கு விமோசனம் என்ன? இம்மாதிரி யானவர்கள் பெருகுவதற்கு யார் பொறுப்பு? எது பொறுப்பு? இவை களைப் பற்றிப் பாதிக்கப் பட்டவர்கள் சிந்தித்துச் சீர்குலைவது தவிர மற்று முன் னோர்கள் இதனைச் சிந்திக்கிறார்களா?

யோகாசன வழி தவிர இவர்களுக்கு வேறு விமோசனம் நிச்சயமாய்க் கிடை யாது. உலர்ந்து போன கோளங்களை, சக்தி இழந்த நரம்புக் கூட்டங்களை, வறண்டு போன ரத்தோட்டங்களை, மீண்டும் புத்துயிர் அளித்துச் சரிப்படுத்து வது ஹலாசனமே. இதையும், மற்றும் சில ஆசனங்களையும் பழகி வந்தால் இரண்டு மூன்று ஆண்டுகளில் பூரண மனிதனாகலாம்.

"அப்பாடி! அவ்வளவு நாளா பழக வேண்டும்?" என்று பிரமிப்பாய் இருக் கலாம். நாற்பது நாள், ஒரு வாரம், சில மணி நேரத்தில் என்று சொல்லி ஏமாற் றும் வித்தையல்ல; பணம் பறிக்கும் மார்க்கமல்ல. வாழ்நாளில் ஆயுள் முழு வதும் கஷ்டப்படுவோருக்கு ஒரு ஆண்டு என்ன அதிகமா? இயற்கை சற்று சாவ காசமாய்த்தான் வேலை செய்யும். இயற்கை வழி இருக்க, செயற்கை வழி சென்று, காலம், பணம், புத்தி எல்லாம் வீணே விரயம் செய்ய வேண்டாம். (தொடரும்)

## ஷஷ்டியப்த பூர்த்தி விழா

தமிழ் நாடு முழுதும் பல்லாண்டுகளாக விசிஷ்டாத்வைத சித்தாந்தத் தைத் தீவிரமாகப் பிரசாரம் செய்துவரும் காஞ்சீபுரம் மகா வித்வான் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் ஷஷ்டியப்தபூர்த்தி வருகிற மார்ச் மாதம் 27ந் தேதி வெகு விமரிசையாகக் கொண்டாடத் திட்டமிடப் பட்டிருக் கிறது. ஹைக்கோர்ட்டு ஜட்ஜுகள், மாஜி ஜட்ஜுகள், மந்திரிகள், பிரபல வக்கீல்கள், டாக்டர்கள், பெரும் வியா பாரிகள், மிராசுதார்கள்—இப்படிச் சுவாமிகளிடம் ஈடு பாடுள்ள பலதிறப்பட்டவர்கள் அங்கத்தினர்களாகவுள்ள ஒரு வரவேற்புக் கமிட்டி அமைக்கப்பட் டிருக்கிறது. இக் கமிட்டியார், சுவாமிகளின் ஷஷ்டியப்தபூர்த்தி ஞாபகார்த்த மண்டபம் நிறுவுதல், நினைவு மலர் வெளியிடுதல் சென்னை சர்வ கலாசாலையில் விசிஷ்டாத்வைத சித்தாந்தச் சொற் பொழிவு ஏற்பாடுகள் நிரந்தரமாக நிறுவுவது போன்ற பல தொண்டுகள் செய்யத் திட்டமிட் டிருக்கின்றனர்.



பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள் விசிஷ்டாத்வைத சித்தாந்தம் பரப்பும் வகையில் தமிழுக்கும் சமயத்துக்கும் செய்திருக்கும் தொண்டு அளவிடற் கரியது. ஆழ்வாராதிகளின் இனிய பாடல்களுக்கு அருமை யான வியாக்யான உரைகள் புஸ்தக ரூபமாகவும் பிரசங்க வாயிலாகவும் வெளி யிட்டு அரும் தொண்டு செய்திருக்கிறார்கள். அன்னாரின் ஷஷ்டியப்த பூர்த்தி ஞாபகார்த்த நிதிக்கு எல்லோரும் பெருவாரியாக உதவவேண்டும். அவ்விதம் திரவிய சகாயம் செய்ய விரும்புபவர்கள் கீழ்க்கண்ட விலாசத்துக்கு அனுப்பி வைக்கலாம். ஸ்ரீ வி. ராதாகிருஷ்ண பிள்ளை, காரியதரிசி, பிரதிவாதி பயங் கரம் ஷஷ்டியப்த பூர்த்தி நிதிக்குழு; 147, அண்ணா பிள்ளைத் தெரு, சென்னை.

# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி

## 317. நான தோற்றேன் இந்திரனுக்கு!

தம்பி அதிகாயன், லக்ஷ்மணன் அம்பினால் மடிந்தான் என்று கேட்ட மாத்திரத்தில் அவமானமும் கோபமும் இந்திரஜித்தின் மனசில் அபாரமாய் மூண்டு விட்டன. மற்றத் தம்பிகளும் இறந்து போனார்கள் என்று ராவணனே சொல்லக் கேட்டான். இதோடு தம்பி அட்ச குமாரன் அனுமனால் ஆதியில் தரையோடு தரையாய்த்தேய்க்கப்பட்டு இறந்த விஷயமும் ஞாபகத்துக்கு வந்தது.

எல்லாம் சேர்ந்து ஒரே கோபமாய்த் தந்தை ராவணன் மேலேயே பாய்ந்தது.

* * *

கோபத்தில் பேசுகிறான் இந்திரஜித்து:

"அட்ச குமாரனை நிலத்தோடு தேய்த்த அந்தப் பொல்லாத குரங்கை (அனுமனை) ஏதோ விக்கல் வந்த போது உட்கொள்ளுவதற்கான அற்ப பதார்த்தம் என்று எண்ணி அலக்ஷியமாகப் பேசிப் பிறரை ஏவிவிட்டாய். நீயே போய் அந்தக் குரங்கைக் கொன்றிருக்க வேண்டும். அது செய்யவில்லை நீ."

அக்கப் பெய
ரோனைநி லத்தொ(டு)
அரைத்துளா னை
விக்கற் கொரு
தூஎன எண்ணி
விளம்பிவிட் டாய்!
புக்கத் தனை
எய்தநி னைந்திலை
புந்திஇல் லாய்!
மக்கள்நந் துனை
அற்றனை; இற்றதுன்
வாழ்க்கைமன் னே.

[அக்கப் பெயரோனை நிலத்தொடு அரைத்துளானை: அட்சகுமாரனை தரையோடு தரையாய்த் தேய்த்த அனுமனை; விக்கற்கொரு தூ என எண்ணி விளம்பி விட்டாய்: விக்கலைத் தடுப்பதற்கான ஒரு அற்பப் பதார்த்தம் என்று எண்ணி அலக்ஷியமாய்ப் பிறரை ஏவி விட்டாய்; புக்கு அத்தனை எய்த நினைந்திலை புந்தியில்லாய்: அந்த இடத்துக்கு நீயே போய் நிற்க எண்ணவில்லை புத்தியில்லாதவனாகிய நீ;

மக்கள் நந்துனை அற்றனை: புத்திரரால் வரும் பலம் உனக்கு இல்லை; இற்றதுன் வாழ்க்கை மன்னே: உன் வாழ்க்கை அடியோடு தொலைந்து போய் விட்டது; மன்: ஒரே படியாக.]

* * *

மேலும் புலம்புகிறான் இராவணன் புதல்வன் இந்திரஜித்து:

"நடந்த காரியத்தை எண்ணி என்ன பிரயோசனம்? சென்ற காரியத்தை நினைப்பதாலும், நினைத்துப் புலம்புவதாலும், மனசை ஏங்க விடுவதாலும் பிரயோசனம் இல்லை."

என்நின் று
நினைத்தும் இயம்பியும்
ஏங்கியுந் தான்?
கொல்நின் ற
படைக்கலத் தெம்பியைக்
கொன்றுளா னை
அந்நின் ற
களத்(து)அவன் ஆக்கையை
நீக்கியல் லால்
மன்நின் ற
நகர்க்கினி வாரலென்;
வாழ்வும்வேண் டேன்!

[என்: என்ன பிரயோசனம்; கொல் நின்ற படைக்கலத்து எம்பியை: கொலைத் தொழிலைச் சதா தன்னிடத்தே கொண்டுள்ள வாள், வேல் முதலான படைக்கலங்களைக் கையாளும் தம்பி அதிகாயனைக் கொன்ற அந்த மனுஷன் லக்ஷ்மணனை; அந் நின்ற களத்து அவன் ஆக்கையை நீக்கு அல்லால்: அந்தப் போர்க்களத்திலேயே அவனது உடம்பை ஒழித்தால் அல்

லது: மன் நின்ற நகர்க்கினி வாரலென்: கோட்டை பாதுகாப்புக்களினுல் உறுதியாக இருக்கிற இந்த இலங்கை நகருக்குள் இனி பிரவேசிக்க மாட்டேன்: வாழ்வும் வேண்டேன்: இளவரசப் பதவி முதலான சம்பத்தையும் விரும்ப மாட்டேன்]

∴

மேலும் வீரா வேசம் பொங்குகிறது இந்திரஜித்தின் உள்ளத்தில்.

“யாராலும் மாய்க்க முடியாத உறுதியான உயிர்கொண்ட தம்பியின் உயிரை அல்லவா வாங்கி விட்டான் அந்த மனுஷன்.

“அந்த மனுஷனுடைய உடலிலிருந்து பெருகும் இரத்தத்தைப் பருக வேண்டாமா அந்த நிலமகள்.”

மாற்ரு உயிர்
எம்பியை மாற்றிய
மானுடன் தன்
ஊற்ருர் குரு
திப்புனல் பார்மகள்
உண்டிலா ளேல்,—
எற்ருன் இகல்
இந்திரன்,—ஈரிரு
காலெனக் குத்
தோற்ருன்,—அவற்(கு)
என்னெடும் சேவகம்
தோற்கஎன் ருன்.

[மானுடன் தன்: லக்ஷ்மணனது; ஊற்ருர் குருதிப் புனல் பார் மகள் உண்டிலாளேல்; ஊற்ருய்ப் பாயும் இரத்தத்தை நில மகள் பருகாவிட்டால் அதாவது லக்ஷ்மணனது இரத்தத்தை அப்படியே நான் சிந்தாவிட்டால்—என்ன ஆகும்?

எற்ருன் இகல் இந்திரன்: இந்திரனே என்னோடு போர் புரிந்தான்; ஈரிரு கால் எனக்குத் தோற்ருன்: நாலு தடவை என்னிடம் தோற்ருன்; அவற்கு என்னெடும் சேவகம் தோற்க என்ருன்: அந்த இந்திரனுக்கு என்னுடைய மகா பராக்கிரம வெற்றிகளெல்லாம் தோற்பதாக — லக்ஷ்மணனது இரத்தத்தைச் சிந்தாது போனல்]

இந்திரஜித்தின் வீரம் என்ன, தந்தை தம்பி மார்பீதுள்ள வாஞ்சை தான் என்ன, எல்லாம் அழகாய்த் துலங்குகின்றன. பாத்திரத்தை அபூர்வ திறத்தோடு வனைந்திருக்கிறது.

# மனமாற்றம்

வை. திருநாவுக்கரசு

"ஏசமான்! நான் உங்களுக்கு வஞ்சனையா செய்கிறேன்? இப்படிப் பயிர் அழிந்து போகாமல் இருந்தால் குத்தகைப் படி அளந்துதான் இருப்பேன்!"

"ஏண்டா, இந்த வெட்டி அளப்பெல்லாம்! குத்தகைச் சீட்டில் என்ன எழுதிக் கொடுத்திருக்கிறாய்?"

"சீட்டு இருக்குங்க...! இந்த ஏழைக்குக் கொஞ்சம் பச்சாத்தாபம் காட்டுங்க! என் கதியைக் கண்ணைத் திறந்து பாருங்க!"

"அதுதான் கொட்டாப்புளி மாதிரி இருக்கிறாயே! உனக்கென்னடா கேடு வந்துவிட்டது? குத்தகைப்படி ஐம்பது கல நெல்லையும் அளந்துவிடு. இல்லை, கலம் எட்டு ரூபாய் வீதம் பணத்தைக் கொண்டு வந்து வை!"

"எட்டு ரூபாயா......!"

"ஆமாண்டா! அவனவன் பிளாக் மார்க்கெட்டிலே பத்து ரூபாய்க்கு விற்கிறான்......!"

கண்ணப்பன் பெரிய பண்ணை சுப்பராய முதலியாரிடமிருந்து ஒரு வேலி நிலத்தைக் குத்தகைக்கு எடுத்திருந்தான். அவன் பல வருஷங்களாகவே பெரிய பண்ணையின் குத்தகைக்காரன். கணக்காக அவன் குத்தகைப் படி அளந்து விடுவான். பண்ணையாரிடம் அவன் இதுவரை பல்லைக் காட்டி நின்றதில்லை. இந்த வருஷம் அப்படி நேர்ந்து விட்டது.

கண்ணப்பன் கடுமையான உழைப்பாளி. அவன் கைபட்டால் மண்ணும் பொன்னாக விளையும் என்பார்கள்.

அந்த வருஷமும் அவன் உழைப்புக்குக் குறைச்சலில்லை. அவன் மண்ணுக்குக் கொடுத்த ஊட்டத்துக்கும் அளவில்லை. நிலமும் அவனுக்கு வஞ்சனை செய்யவில்லை. பயிர் செழுமையாகக் கிளம்பி தெளியனாகத் தான் கதிர் வாங்கியிருந்தது. 'ஒரு கதிரிலே ஒரு படி நெல் காணும்பா!' என்று ஊரே சொல்லிக் கொண்டிருந்தது. ஊரின் பொருமல் தானோ, என்னவோ அவனுக்கு அப்படி நேர்ந்து விட்டது.

கண்ணமங்கலம் பள்ளமான கிராமம். அதுவும் கண்ணப்பன் பங்கு ஆற்றோரம் இருந்தது. கனத்த மழை பெய்ததுடன் வெட்டாறும் உடைப்பு எடுத்துக் கொண்டது. கதிர் குலுங்கி அறுவடைக்குக் காத்திருந்த பயிர்கள் நீரில்மூழ்கின. கண்ணப்பன் உழைப்பெல்லாம் பாழாகியது.

பயிரை அழித்ததுடன் அந்தப் பாழும் மழை நிற்கவில்லை. அவன் மண் குடிசை மளமள வென்று விழுந்து விட்டது. குழந்தை குட்டிகளை இழுத்துக்கொண்டு சாகாமல் தப்பிப் பிழைத்ததே பெரும் பாடாயிற்று.

அது மட்டும் அல்ல; அவன் கண்ணென்று மதித்த வேறு இரண்டு உயிர்களும் மடிந்தன. அவன் உடமை எல்லாம் அவற்றிலேதான் முடங்கிக் கிடந்தது.

கள்ளி பொறுக்கி விற்று, வரட்டி தட்டிக் காசாக்கி, பண்ணையார் வீட்டு வேலை செய்து சம்பாதித்துச் சேர்த்திருந்த பணத்தைப் போட்டு கண்ணப்பன் மனைவி தங்கச் சங்கிலி செய்திருந்தாள். அவள் நாவற்பழ நிற உடலை எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தது, அந்த நாலு பவுன் சங்கிலிதான்! அதை கண்ணப்பன் ஆசை காட்டி வாங்கிச் சேட்டிடம் விற்றான். நல்லெண்ணத்துடன்தான் விற்றான். மாட்டு விலை 'சூடாக' இருக்கிறது. இப்பொழுது இரண்டு கன்றுகளை வாங்கி வளர்த்தால் பல் பட்டதும் இரட்டிப்பு லாபம் பெறலாம் என்று அவன் திட்டம் போட்டிருந்தான்.

கொழுகொழு வென்று வளர்ந்திருந்த மயிலைக் காளைகள் இரண்டும் மண் சுவர் இடிந்து விழுந்து மாண்டன. அவன் எண்ணத்தில் மண் விழுந்தது.

வீடு இடிந்தது; மாடு செத்தது; முற்றிய கதிர்கள் அழிந்தன!

ஒடுங்கியிருக்கக் குடிசையில்லை; முதல் முடங்கியிருந்த உடமை அழிந்தது. உண்ண உணவில்லை. ஆனால் பண்ணையாருக்கு எழுதிக் கொடுத்த குத்தகைச் சீட்டு மாத்திரம் இருந்தது! அதுவும் சும்மா இல்லை! கோரச் சிரிப்பு சிரித்துக் கொண்டிருந்தது!

இத்தனை நாளாக ஒழுங்காகக் குத்தகையை அளந்திருக்கிறோமே, இப்பொழுது கருணை காட்ட மாட்டாரா என்று எண்ணியே கண்ணப்பன் முதலியாரிடம் வந்தான். ஆனால் அவனுடைய நைந்து போன உள்ளத்திலே முதலியாரின் விஷம் தோய்ந்த சொல்லம்புகள் பாய்ந்தன. தலையிலே கைவைத்துத் திரும்பினான் கண்ணப்பன்.

* * *

கண்ணப்பன் சென்ற சிறிது நேரத்துக்கெல்லாம் சுப்பராய முதலியாரின் ஏக புதல்வன் வந்திறங்கினான்.

"என்னடா திடுதிடுப்பென்று......! காகிதம்—கீகிதம் எழுதாமல்...!" என்று இழுத்தார் முதலியார். மகனிடம் அவருக்குச் சிறிது அச்சம். அவன் சென்னையிலே உல்லாச வாழ்வு நடத்தி 'பெரிய மனிதனாய்' வேஷம் போட்டு வந்தான். அவனுக்கு டாம்பீகச் செலவுக்காக ஆயிரக்கணக்கில் மாதந்தோறும் வேண்டியிருந்தது.

"காகிதம் போட்டுவிட்டுத் தான் வரணுமா? உம்...சரி...பணம் வைத்திருக்கிறாயா?" என்ற கேள்வி ஒரு நாழிகை கழித்து மகனிடமிருந்து வந்தது.

"பணம் இல்லேடா, தம்பி! அதுவும் இந்த வருஷம் வெள்ளம் புகுந்து போச்சு. குத்தகைக்காரன் எவனும் சரியாக நெல் அளக்கவில்லை......!"

"எப்பொழுது நான் பணம் கேட்டாலும் இந்த ஒப்பாரிதானே! எனக்குத் தெரியாதா? நீ வைத்திருப்பாய்!"

"ஐந்நூறு ரூபாய் இருக்கிறது..."

"எனக்கு இரண்டாயிரம் ரூபாய் வேண்டும்" என்றான் மகன் கண்டிப்பாக.

வேறு வழியில்லை. ஏக புதல்வன் எரிச்சலைத் தாங்க முடியாது. தன் பெட்டியைத் துடைத்து அவன் கேட்டதை எடுத்துக் கொடுத்து விட்டார். அவன் வந்த வண்டியிலேயே ஊருக்குத் திரும்பி விட்டான்.

"சாப்பிட்டு விட்டுப் போயேண்டா!" என்ற தாயாரின் அன்பு கனிந்த அழைப்பும் அவன் செவியில் ஏறவில்லை.

ஒரு அன்பு வார்த்தையில்லை. தாய் தந்தை என்ற மதிப்பில்லை. சுப்பராய முதலியாரின் மனம் புழுங்கிற்று. பெற்ற வயிறு பற்றி எரிந்தது!

* * *

இடிந்து கிடந்த குடிசைக்குத் திரும்பிய கண்ணப்பனை அவன் பிள்ளைகள் சூழ்ந்து கொண்டன. அந்தப் பாக்கியத்திலே அவனுக்குக் குறைவில்லை. எட்டு வயதுப் பெண்ணிலிருந்து ஒரு வயது கைக்குழந்தை வரை வரிசைக் கிரமமாக அரை டஜன் உருப்படிகள் இருந்தன.

கண்ணப்பன் இடிந்து போய் ஒரு மூலையில் துயரமே உருவாக உட்கார்ந்தான்.

"ஏன் அப்பா விசனமாக உட்கார்ந்திருக்கிறாய்?" என்று முதுகைக் கட்டிக் கொண்டான் ஐந்து வயதுப் பயல்.

"சுவர் வைக்க நான் மண் வெட்டி வந்து கொட்டுகிறேன், அப்பா!" என்றாள் மூத்த பெண்.

"நான் தண்ணீர் கொண்டுவந்து ஊற்றுகிறேன்" என்றான் இன்னொருவன்.

"நான்தான் மண் மிதிப்பேன்!" என்றது மற்றொன்று.

"நான் கூரைக்குக் கீத்து முடைந்து தருகிறேன், அப்பா!" என்றான் மூத்த பயல்.

குழந்தைகளின் அன்பு வெள்ளம் கண்ணப்பனுடைய துக்கத்தை எல்லாம் எங்கேயோ அடித்துச் சென்றுவிட்டது. எல்லோரையும் கட்டியணைத்துக் கண்ணீரால் நனைத்தான்.

மனைவி வந்தாள். "கடைசி நகையையும் விற்று மாடு வாங்கினோம். அதுவும் செத்துப் போய்விட்டதே என்றுதானே கலங்குகிறீர்கள்! உங்களுக்குத் தெரியாமல் நெல்லு மணியை விற்று ஐந்து பவுன் சேர்த்து வைத்திருக்கிறேன். பண்ணைக்காரருக்குத் தொலைக்க வேண்டியதை தொலைத்துவிட்டு வாருங்க! மீதியைக் கொண்டு ஒரு எருமை மாடு வாங்கிப் பால் ஊற்றியாவது பிழைக்கலாம்!" என்றாள்.

மனைவியின் சொற்களைக் கேட்டு அவன் அடைந்த ஆனந்தத்துக்கு ஈடு இணை ஏது?

முதலியார் வீட்டை நோக்கி வெகு வேகமாக நடந்தான் கண்ணப்பன்.

* * *

ஏதோ பிரம்மஹத்தி பிடித்தவரைப் போல முதலியார் உட்கார்ந்திருக்கிறாரே



என்று எண்ணிக் கொண்டே கண்ணப்பன் அவரை நெருங்கினான். அவர் கையில் ஏதோ காகிதம் இருந்தது.

"எசமான்! என் பெண்டாட்டி ஏதோ சேர்த்து வைத்திருந்தாளாம். இந்தாருங்கள்! என் குத்தகை பாக்கிக்கு இந்த மூன்று பவுனை வைத்துக் கொள்ளுங்கள்!" என்று நடுங்கிக் கொண்டே நீட்டினான் கண்ணப்பன்.

"மூன்று பவுனைக் கொடுத்தால் எப்படிச் சரியாகும்? இன்னும் இரண்டுபவுன் கொண்டுவா!" என்று முதலியார் சீறி விழுவார் என்று நினைத்தான் அவன்.

"வேண்டாம், கண்ணப்பா! நீ குழந்தை குட்டிக்காரன். நீ கண்ணீர் சிந்தினால் எனக்குத்தான் கஷ்டம். வெள்ளம் புகுந்து அழித்தால் நீ என்ன பண்ணுவாய் பாவம்! எனக்கு ஒன்றும் வேண்டாம். நீ பவுனை எடுத்துக்கொண்டு போ!" என்றார் முதலியார்.

பேசுவது பண்ணையார்தானா என்பது கண்ணப்பனுக்குச் சந்தேகமாகி விட்டது.

குடியானவர் நெஞ்சை உரந்து முதலியார் சேமித்த பணம் பத்து லட்சமும் சுக்ரீவன் பாங்குடன் மூழ்கி விட்டது என்பதை அறிவிக்கும் தந்திதான் அவர் கையிலே இருந்தது என்பதைக் கண்ணப்பன் கண்டானா?

தன் மகனின் நடத்தை—கண்ணப்பன் மனைவி மக்களின் உள்ளம் இரண்டையும் கண்முன் நிறுத்திப் பார்த்த முதலியாருக்கு மனமாற்றம் நிகழாமல் இருக்க முடியுமா?

# மருந்துக்குப் போனவர்!

ஜானகி என்றால் அவன் அப்பா ராமுவுக்கும், அம்மா சீதாவுக்கும் ரொம்ப உயிர். ஆம், சீமந்த புத்திரியல்லவா?

அந்த அருமைப் பெண்ணுக்கு ஒரு நாள் திடீரென்று கடுமையான ஜுரம் வந்து விட்டது. தெர்மாமீட்டர் 103, 104, 105 டிக்ரி என்று காட்ட ஆரம்பித்துவிட்டது. ராமுவுக்கும் சீதாவுக்கும் ஒரே கவலையாகப் போய்விட்டது. என்ன செய்வது என்று தெரியாமல் தவித்து விட்டனர்.

கடைசியில் ராமு, "நான் போய் நம்ம டாக்டரைக் கேட்டு மருந்து வாங்கிக் கொண்டு வருகிறேன்" என்று போனான். போனான், போனான்; அப்படிப்போனான்! ஒரு நாள், இரண்டு நாள், ஒரு வாரம், இரண்டு வாரம், ஒரு மாசம், ஒரு வருஷம் பத்து வருஷம் என்று ஆகிக் கொண்டிருந்ததே தவிர ஆளைக் காணவில்லை.

இதற்குள் ஜானகி உடம்பு குணமாகி, பெரிய பெண்ணாகி, கல்யாணமாகி மூன்று வயதுக் குழந்தைக்கும் தாயாரானாள்.

ஜானகியின் குழந்தையின் பெயர் சியாமளா. இந்தச் சியாமளாவுக்கும் ஒருநாள் ஜுரம் வந்துவிட்டது. கடுமையான ஜுரம். முன்பு ஜானகிக்கு வந்தாற்போலவே வந்து விட்டது. சிறு பெண்ணாக இருந்தபோது தனக்கு வந்த ஜுரத்தின் நினைவு ஜானகிக்கு வந்துவிட்டது!

உடனே, கண்ணன் (அவன்தான் ஜானகியின் புருஷன்) "நான் டாக்டரிடம் போய் மருந்து வாங்கிக் கொண்டு வருகிறேன், நம்ம சியாமளாவுக்கு!" என்று புறப்பட்டான்.

இதைக் கண்ட ஜானகி 'வேண்டாமே! ஐயோ வேண்டாமே! நீங்கள் மருந்து வாங்கிக் கொண்டு வரப் போக வேண்டாமே! உங்களுக்குப் புண்ணியமாகப் போகிறது!" என்று அழாக் குறையாகக் கெஞ்சினாள்

கண்ணனுக்கு ஜானகியின் செய்கை புரியவே இல்லை. "ஏன் வேண்டாம் என்கிறாய்?" என்று கேட்டான்.

"பத்து வருஷத்துக்கு முன், இப்போ நம்ம சியாமளாவுக்கு ஜுரம் வந்தாற் போலவே எனக்கும் ஜுரம் வந்தது. அப்போது எங்கப்பா எனக்கு மருந்து வாங்கிக் கொண்டு வருகிறேன் என்று போனவர்தான் இன்னும் வரவில்லை..." என்றாள்.

இப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும் போதே வாசற் பக்கம் யாரோ வரும் காலடிச் சத்தம் கேட்டது; எல்லோருடைய கண்களும் அந்தப் பக்கம் திரும்பின. நரைத்த தாடி வளர்ந்த ஒரு கிழவர் கையில் ஒரு பாட்டிலுடன் உள்ளே நுழைந்தார்.

ஜுரத்துடன் படுக்கையில் கிடந்த சியாமளா, "இதோ நம்ம தாத்தா வந்துவிட்டார்" என்றாள். ஆம், அந்தக் கிழவர் வேறு யாரும் இல்லை—சாக்ஷாத் ராமுதான். எப்படியோ குழந்தை சியாமளாவுக்கு ராமு தன் தாத்தா என்று தெரிந்து போய் விட்டது.

ஜானகி "அப்பாவா!" என்றாள் ஆச்சரியத்துடன்.

"ஆமாம், அம்மா! நம்ம சர்க்கார் பஸ் வருவதற்குக் கொஞ்ச நேரமாகிவிட்டது. அதனால்தான் இத்தனை நாழிகை!" என்று கூறிக் கொண்டே மருந்து சீசாவைச் சியாமளாவிடம் கொடுத்தார்.

[ஓ' ஹென்ரியின் கதையைத் தழுவியது]

Edited Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Gardens Poonamallee High Road, Kilpauk Madras

Regd. No. M. 4393